SRI VENKATESVARA ORIENTAL SERIES—No. 23

EDITOR :—PROF. P. V. RAMANUJASWAMI, M.A.



# திருவேங்கடவுலா


வித்வான்

T. P. பழனியப்ப பிள்ளை B.O.L.


புதிதாகக் குறிப்புரை எழுதிச் சேர்த்துப் பதிப்பித்தது





திருவேங்கடேச்வரன் கீழ்க்கலை ஆராய்ச்சிக் கழகம்

திருப்பதி

1950

# முகவுரை.

தமிழ் மொழியில் பன்னூறு ஆண்டுகளாகப் பயின்று வருகின்ற பிரபந்தங்கள் தொண்ணூற்ருறு வகையின என்று புலவர் கூறுவர். அவற்றுள் உலா என்பது ஒன்று ஆகும். இச் சொல்லுக்குப் பொருளாவது ஊர்ப்புறம் சென்று சுற்றி வருதல் என்பது. இது பவனி என்றும் கூறப்படும். "பவனிக்கு வல்விரைந்து பல்லக்கில் வாரும்" (155.)-என இந்நூலில் வந்தது காண்க. பாட்டுடைத் தலைவன் தனது ஊர்தியில் அமர்ந்து பெருந்தெருவில் உலாப் போந்ததாகவும் எழுவகைப் பருவப் பொதுமகளிர் அவன்பால் ஈடுபட்டுத் தமது உள்ளத்தெழுந்த காதற் கருத்துக்களை எடுத்து மொழிந்ததாகவும் புலவர்களால் பற்பல கற்பனைத் திறங்கள் அமையுமாறு இது பாடப் படுவதாகும்.

தொல்காப்பியம் பொருளதிகாரம் புறத்திணையியல் பாடாண் திணைக்குரிய சூத்திரங்களுள், "ஊரொடு தோற்றமு முரித்தென மொழிப" என்பது இப்பிரபந்தத்தைக் குறிக்கின்றது. உரைகாரராகிய நச்சினார்க்கினியர் ஈண்டுக் கூறிய உரையாவது.—"பக்குநின்ற காமம் ஊரிற் பொதுமகளிரொடு கூடி வந்த விளக்கமும் பாடாண்டிணைக்கு உரித்தென்று கூறுவர் ஆசிரியர் என்றவாறு. 'தோற்றமு' மென்றது அக்காமந் தேவரிடத்தும் மக்களிடத்தும் விளங்கும் விளக்கத்தை. அது பின்னுள்ளோர் ஏழு பருவமாகப் பகுத்துக் கலிவெண்பாட்டாகச் செய்கின்ற உலாச் செய்யுளாம்" என்பது. மேலதற்கு அடுத்த சூத்திரமாகிய "வழக்கொடு சிவணிய வகைமையான" என்பதினும் இப் பிரபந்தம் பற்றி அவர் கூறிய விளக்க வுரையாவது --"இனி ஊரொடு தோற்றமும் பரத்தையர்க் கன்றிக் குலமகளிர்க்குக் கூறப்படாது" என்பதாகும். இத் தொல்காப்பியச் சூத்திரங்களால் இவ்வுலாப் பிரபந்தம் புறப்பொருளின் பகுதி யாகிய பாடாண் திணையைச் சார்ந்தது என்பதும், இப் பாட்டுடைத் தலைவர் தேவரும் மக்களும் ஆவர் என்பதும், அவர் தமது ஊர்தியில் அமர்ந்து ஊரில் உலாப் போந்தகாலை அவ்வுலாச் சிறப்பினைக் கண்ட பரத்தைமகளிர் அவரை நயந்த பக்கமாகப் பாடப் படுவது என்பதும் இது மிக்க பழமையான வழக்குடையது என்ப

தும் தெரிகின்றன. தேவர் பாட்டுடைத் தலைவராக அமைந்ததற்குத் திருக்கயிலாய ஞானவுலா என்னும் ஆதியுலாவும், மாந்தர் பாட்டுடைத் தலைவராக அமைந்ததற்கு மூவருலாவும் உதாரணங்களாகக் கொள்ளுவர்.

இப் பிரபந்தம் உலாப்புறம் என்றும் புறவுலா என்றும் பெயர் பெறுவது உண்டு. புறப்பொருள் திணைப்பகுதியைச் சார்ந்த பிரபந்தம் என்றும், தலைவன் ஊர்ப்புறத்தே சென்ற உலாவைக் குறிக்கும் பிரபந்தம் என்றும் புலவர்கள் இதற்குப் பொருள் கொள்ளுவர். இப் பிரபந்தம் தெய்வங்களின் மீது பாடப்படுங்கால் திருவுலாப்புறம் என்று இதனை வழங்குதல் உண்டு. தமிழ் நாட்டில் உள்ள பல பெருந் தெய்வத் தலங்களுக்கு இத்தகைய உலாப் பிரபந்தங்கள் ஏற்பட்டு அவ்வத் தலங்களின் தெய்வங்களுக்கு ஏற்பட்ட திருத்தேர் விழாவினைச் சிறப்பிப்பன வாகவும் அக்காலத்தில் சேவிக்கத் தக்கன வாகவும் விளங்குகின்றன.

இப்பிரபந்தத்தின் இலக்கணத்தைப் பிற்காலத்த தாகிய பன்னிரு பாட்டியல் சிறிது விரித்துக் கூறுகிறது.

> "முதனிலை பின்னெழு நிலையுலா வெண்கலி"
>
> "பேதை முதலா எழுவகை மகளிர்கண்
> டோங்கிய வகைநிலைக் குரியான் ஒருவனைக்
> காதல்செய் தலின்வரும் கலிவெண் பாட்டே"

என்ற இந்நூற் சூத்திரங்கள் இவ்வுலாப் பிரபந்தம் கலிவெண்பாட்டால் பாடப்படுவது என்றும், முதனிலை பின்னிலை என்று இரு பகுதிப் படும் என்றும், எழுவகைப் பருவமகளிர் பிரபந்த நாயகனைக் காதலித்துரைத்த கட்டுரைகளை உடையது என்றும் விளக்குகின்றன. ஈண்டுக் குறித்த முதனிலையை

> "குடிநெறி மரபு கொளல்கொடை விடியல்
> நன்னீ ராடல் நல்லணி அணிதல்
> தொன்னக ரெதிர்கொளல் நன்னெடு வீதியின்
> மதகளி றார்தல் முதனிலை யாகும்".
>
> "ஆதி நிலையே குழாங்கொளல் என்றெடுத்து
> ஓதிய புலவரும் உளரென மொழிப"

என்ற இந்நூல் சூத்திரங்கள் உணர்த்துகின்றன. இவற்றால் இப் பிரபந்தத்தின் முதற்பகுதியில் பிரபந்தத் தலைவன் குடிப் பிறப்பும்

மரபும் கொடையும் நீராட்டும் அணிகலன் பூணுதலும் நகர் எதிர் கொள்ள ஊர்தியில் இவர்ந்து செல்லுதலும் கூறப்படும் என்றும், இது முதற் பகுதியாகும் என்றும், இதுவே 'குழாங்கொளல்' என்ற பிறிது பெயரினைப் பெறும் என்றும் தெரிகின்றது. இதன் பின்னிலை யாவது

" ஏழு நிலையும் இயம்புங் காலை
பேதை பெதும்பை மங்கை மடந்தை
அரிவை தெரிவை பேரிளம் பெண்ணெனப்
பாற்படு மகளிர் பருவத் தாதல்
நோக்கி உரைப்பது நுண்ணியோர் கடனே."

என்ற சூத்திரப்படிப் பேதை முதல் பேரிளம்பெண் ஈறாக உள்ள ஏழு வகைப் பருவ மகளிர்களையும் அவர்களின் மனவிகார விளைவு களையும் வருணித்துரைப்பது என்று அறியலாம்.

இப்பாட்டியல்

" பேதைக்கி யாண்டே யைந்துமுத லெட்டே "

" பெதும்பைக்கி யாண்டே யொன்பதும் பத்தும் "

" மங்கைக்கி யாண்டே பதினொன்று முதலாத்
திரண்ட பதினு லளவுஞ் சாற்றும் "

" மடந்தைக்கி யாண்டே பதினைந்து முதலாத்
திடம்படு மொன்பதிற் றிரட்டி செப்பும் "

" அரிவைக்கி யாண்டே யறுநான் கென்ப "

" தெரிவைக்கி யாண்டே யிருபத் தொன்பது "

" ஈரைந் திருநான் கிரட்டி கொண்டது
பேரிளம் பெண்டுக் கியல்பென மொழிப."

பொய்கையார்.

என்ற சூத்திரங்களால் பேதை முதலிய ஏழு பருவங்கட்கும் உரிய ஆண்டளவுகளைக் கூறுகின்றது. பிங்கல நிகண்டு

" பேதை பெதும்பை மங்கை மடந்தை
யரிவை தெரிவை பேரிளம் பெண்ணென
மற்றிவை யேழும் பொற்றொடி மாதர்க்
குருவம் பற்றிய பருவமாண் டேழொடு

"பன்னொன்று பன்மூன்று பத்தொன் பஃதோ
டையைந்து முப்பத் தொன்றெண் ணைந்தே"

என்று இம்மகளிர் பருவங்களுக்குரிய ஆண்டளவுகளைச் சிறிது வேறுபடக் கூறுவதும் அறிக.

இவ் வெழுவகைப் பருவ மகளிரும் தத்தம் பருவங்களுக்குரிய விளையாடற் செயல்களாகிய சிற்றில், பாவை, கழங்கு, அம்மனை, ஊசல், கிளியொடு கிளத்தல், யாழ்வாசித்தல் முதலியவற்றில் ஈடுபட்டுள்ள பொழுதில் பிரபந்தத் தலைவனின் உலாப் புறப்பாடு நிகழு மென்றும், இம்மகளிர் இவ்வாடல்களை விடுத்துத் தலைவனை நோக்கி அவன் திறத்தில் ஈடு பாடுடையாரவ ரென்றும் புலவர்கள் பாடுவது வழக்காருகும். இவ்வழக்காறு மிகப் பழமையான தாதலின் தமிழ்ப் பெருங் காப்பியங்களில் இவ் வுலாச் செய்திகள் கூறப்பட்டுள்ளன. பெருங் கதை யியற்றிய கவிஞர் பெருமான் கொங்கு வேளிரும், சீவக சிந்தா மணி பாடிய மகாகவி திருத்தக்கதேவரும், இராமாவதாரம் பாடிய கவிச்சக்கரவர்த்தி கம்ப நாடரும் தத்தம் நூல்களில் தலைமக்கள் உலாப் போந்ததாக வருணித்துச் சென்றமை அறியலாம்.

"காசினியிற் பிள்ளைக் கவிக்கம் புலிபுலியாம்
பேசு முலாவிற் பெதும்பைபுலி—யாசு
வலவர்க்கு வண்ணம் புலியாமற் றெல்லாப்
புலவர்க்கும் வெண்பாப் புலி"

என்ற பழம்பாடல் இவ்வகை உலாப் பிரபந்தங்களில் பெதும்பைப் பருவப் பகுதியே மிகச் சிறப்புடையதெனக் கூறுகின்றது. வேட்கை பிறவாப் பருவத்து மகளிர், வேட்கை பிறக்கின்ற பருவத்து மகளிர், வேட்கை பிறந்த பருவத்து மகளிர் என முத்திறத்தார் ஆகிய மகளிருள், பெதும்பை வேட்கை பிறக்கின்ற பருவத்து மகள் ஆதலின் அப்பருவ வருணனை சிறப்புடைய தாயிற்று என்று கருதலாம். ஆகவே உலாப்பிரபந்தம் பாடும் புலவர்கள் இப் பெதும்பைப் பருவம் சிறந்த கற்பனை செறிந்ததாகப் பாடுவ ரென்பர்.

இப்போது பதிப்பு எய்தியுள்ள திருவேங்கட வுலா என்பது மேற்கூறிய உலா விலக்கணங்கள் அமையப் பாடப்பட்ட சிறந்த பிரபந்த மாகும். இப்பதிப்புக்கு மூலமாகிய சுவடிகள் சென்னை யாசாங்கத்துக் கீழைக் கலைப் பழஞ்சுவடி நூனிலையத்து No. D 274 உள்ள திருவேங்கட வுலா ஏட்டுச் சுவடி ஒன்றும், No. D 275 உள்ள அப்

பிரபந்தக் கடிதக் கையெழுத்துப் பிரதி ஒன்றும் ஆக இரண்டு ஆகும். சில ஆண்டுகளுக்கு முன் யான் இவற்றை நோக்கிய போது திருவேங் கடத் திருப்பதியில் கோயில் கொண்டு எழுந்தருளியுள்ள திருவேங் கடமுடையான் மீது பாடப்பட்டுள்ள தமிழ்ப் பிரபந்தங்கள் எல்லா வற்றினும் பழமை நெறி பற்றிய இப்பிரபந்தம் அச்சில் வருவது இன்றியமையாக் குறை என எண்ணிப் பிரதி செய்து கொண்டேன். பின்னர் பலமுறை படித்துவர இதன் சிறப்புக்கள் தெரிய வந்தன.

திருவேங்கட முடையான் மீது பாடப்பட்டு வழங்கி வரும் தமிழ்ப் பிரபந்தங்களுள், அழகிய மணவாள தாசர் என்ற திவ்விய கவி பிள்ளைப் பெருமாள் ஐயங்காரால் பாடப்பட்ட திருவேங்கட மாலை, திருவேங்கடத்தந்தாதி என்ற இரண்டு பிரபந்தங்களும் தமிழ் நாடு முற்றும் பாராட்டிப் படிக்கும் சிறப்புடையன ஆகும். தமிழ் கற்கத் தொடங்குவார்க்குத் தமிழ்ச்சுவை யூட்டும் அற்புத மாட்சி யுடையவை யாகும். அந்தகக் கவி வீராகவ முதலியாரின் பெண் வயிற்றுப் பேரனார் ஆகிய முத்தமிழ்க்கவி - வீராகவ முதலியார் பாடிய திருவேங்கடக் கலம்பகம் என்பது மேற்கூறிய பிரபந்தங்க ளோடு ஒத்த சிறப்புடையது. பின்னர் எழுந்த பிரபந்தங்கள் மண வாள நாராயண சதகம் என்ற திருவேங்கட சதகமும், வடவேங்கட நாராயண சதகமு மாகும். இவை நாராயணபாரதி, நாராயணதாசர் என்ற இருவரால் இயற்றப்பட்டவை. இங்குக் கூறிய மாலை, அந் தாதி, கலம்பகம், சதகம் என்ற பிரபந்தங்கள் பலவற்றினும் உலாப் பிரபந்தம் மிகப் பழமையான சிறப்பினது ஆதலின் இதன் வெளி யீடு இன்றியமையாக் குறையாவது காண்க.

தமிழ் மொழியில் வழக்கிலுள்ள ஆதியுலா முதலாகிய பழைய உலாப் பிரபந்தங்கள் பலவும் ஏறத்தாழ ஐந்நூற்றிற் குறைந்த கண்ணி களை உடையன ஆகும். இத் திருவேங்கட வுலா அறுநூற்றேழு கண்ணிகளை யுடைமையின் அவற்றினும் நெடியதாகும். அன்றியும் இப் பிரபந்தம் திருவேங்கடத்தைச் சிறப்பிக்கும் மற்றைப் பிரபந்தங் களைக் காட்டிலும் அத்தலத்துக் குரிய நடைமுறை வரலாறுகளையும், திருவேங்கடமுடையான் அற்புதச் செய்திகளையும், தீர்த்தம், பேறு பெற்றோர், திருவிழா, திருக்கோயில் அமைப்பு, திருப்பணி, சேவிப் போர் முதலிய திறங்கள் பற்றிய பழஞ் செய்திகளையும் தெளிவாகக் குறிக்கின்றமையின் வெளியீடு பெற வேண்டுவது பெரிதும் இன்றி யமையாத தாயிற்று.

இப் பிரபந்தத்தைப் பற்றித் திருமலையி லுள்ள கோயில் கல்வெட்டு ஒன்றில் குறிக்கப்பட்டுள்ள செய்தி தமிழறிஞர்க்கு மிக்க வியப்பூட்டுவ தாகும். அக் கல்வெட்டு ஏறத்தாழ நானூறு ஆண்டு கட்டு முற்பட்ட பழமையுடையது. ஆதலாலும் இப் பிரபந்தத்தின் சிறப்பினை அறிந்து கொள்ளுதற்கு ஆதாரமாவது ஆதலானும் அறிஞர் தாமே நேரில் கண்டு கொள்ளுமாறு அதனை இங்குத் தருகின்றேன் :

திருமலை-திருப்பதி தேவஸ்தானம் சிலாசாஸனங்கள். 2-வது தொகுதி. எண் 136. (எண் 336. திருமலைக் கோயில்) பக்கம் 324-325.

1. உ ஸாஹஸ்ர ஸ்வஸ்திஸ்ரீ ஸகாப்தம் ஆயிரத்து நானூற்று ஒருபத்து எட்டின்மெல் செல்லாநின்ற நள ஸம்வத்ஸரத்து தநுஞாயற்று அபர பக்ஷத்து ஷஷ்டியையும் புதவாரமும் பெற்ற பூசத்து நாள் திருமலையில் ஸ்தானத்தாரொம் திருமலை திருப்பதியில் கந்தாடை அப்பச்சியார்

2. அண்ணாவுக்கு ஸிலாஸாஸநம் பண்ணி குடுத்தபடி திருவெங்கடமுடையான் பதினஞ்சு நாளைக்கொருக்கால் வெள்ளிக்கிழமைநாள் புழுகுகாப்பு முறைதோறும் புழுகுகாப்பு சாத்தி அருளிற வேளையிலே கந்தாடை இராமாநுஜ அய்யங்கார் பேரில் உலாவும்

3. கெட்டருளி இரண்டு அதிரஸப்படியும் அமுது செய்தருளும் படிக்குக் கட்டளைபண்ணி இற்றைநாள் ஸ்ரீபண்டாரத்துக்கு ஒடுக்கும் பொ நூறா இப்பணம் ஆயிரத்து ஐநூறு இதில் படைவீட்டு இராஜ்யத்தில் கலவைப்பற்றில் கடப்பெரியில் மஹாஜநங்களில்

4. பருந்தூர் திருவெங்கட முடையான் பங்கு ஒன்றும் கைதடுப்பூர் வழுத்துணையினர் பங்கு அரையும் ஏகாம்பர பண்டிதர் பங்காய் மஹாசனங்கள் தமக்கு விற்ற பங்கு அரையும் ஆக தாம் கொண்டுடைய ஸர்வமாந்ய பங்கு இரண்டில் சாதனமும் ஸ்ரீபண்டாரத்துக்கு

5. குடுக்கையில் இந்த சாதனப்படி பணம் ஆயிரத்து நானூற்று அறுபதும் இற்றைநாள் ஸ்ரீ பண்டாரத்துக்கு ரொக்கமாக செலுத்தின பணம் நாற்பது ஆக பொ நூறா இப்பணம்

ஆயிரத்து அனூற்றுக்கும் கொண்ட இந்த இரண்டு பங்கில் விளைந்த முதலிலும் இந்த. இரண்டு. பங்கை

6. ஞெக்கிவரும் மனை எல்லை கொல்லை இவை இற்றை ஞெக்கி வரும் சகல சமுதாய ப்ராத்தியிலும் உண்டான முதல் கொண்டு திருவெங் கடமுடையானும் அலமெல் மங்கை நாச்சியாரும் பதினஞ்சு நாளைக்கு ஒருக்கால் வெள்ளிக் கிழமைநாள் புழுகுகாப்பு

7. சாத்தி அருளுகிறபொது இராமனுச அய்யங்கார் உலாக் கேட்டருளி அமுது செய்த்ருளும் அதிரசப்படி இரண்டுக்கு மலைகினியனின்றான் காலால் அமுதுபடி இரண்டு மரக்கா லும் நெய் அமுது நாழியும் சற்கரை அமுது இருனூற்று பலமும் மிளகு அமுது உழக்கும்

8. ஆக இந்த வகைபடி ஸ்ரீ பண்டாரத்திலெ விட்டு புழுகுக் காப்பு முறையள்தொறும் அமுது செய்தருளக் கடவதாக வும் அமுது செய்தருளின அதிரஸப்ரஸாதத்தில் விட்ட வர் விழுக்காடு படி ஒவ்வொன்றுக்கு அதிரஸப்ப்ரஸாதம் பதிமுன்றும் தாமெ

9. பெறக்கடவாரகவும் னிக்கினின்ற அதிரஸப்ரஸாதம் உள் ளது பூவசத்தில் அடைப்பிலெ சிலவழித்துக் கொள்ளக் கடவொமாகவும் இப்படிக்கு தம்முடைய சந்தான பரம் பரை சந்ராதித்யவரை நடக்கக் கடவதாகவும் இப்படிக்கு ஸ்ரீவெஷ்ணவர்கள் பணியால் கொயில்

10. கணக்கு திருனின்ற ஊருடையான் எழுத்து இவெ ஸ்ரீவெஷ்ணவ ரக்ஷை

இக்கல்வெட்டு திருமலைக் கோயிலின் இரண்டாம் பிராகாரத்தின் வடக்குச் சுவரில் உள்ளது. இது விசயநகர இராச்சிய மன்னராகிய சாளுவ நரசிம்ம ராயருடைய ஆட்சிக் காலத்தில் அமைந்த தெனத் தெரிகின்றது. இதன் இரண்டாவது வரியி னிறுதியில் "கந்தாடை இராமானுச அய்யங்கார் பேரில் உலாக் கேட்டருளி" என்றும் ஏழாவது வரியின் தொடக்கத்தில் 'இராமானுச அய்யங்கார் உலாக் கெட்டருளி' என்றும் குறித்துள்ள ஓர் உலாப் பிரபந்தம் ஏற்பட் டிருந்த தென்றும், திருவேங்கட முடையான் ஒரு திங்களில் ஒரு பக்கத்துக்கு ஒருமுறை வெள்ளிக் கிழமை நன்னாளில் புழுகுக்காப்

புச் சாத்தித் திருமஞ்சனம் கொண்டருளும் பொழுதில் அவ்வுலாப் பிரபந்தத்தைக் கேட்டருளி அதிரஸப்படி அமுது செய்தருளுதற் காக நிபந்தம் செய்யப்பட்ட தென்றும், அக்கட்டளை யிட்டார் கந்தாடை அப்பாச்சி அண்ணு அய்யங்கார் என்றும் குறித்துள்ளது.

திருவேங்கட முடையான் கேட்டருளுதற் கென்று அமைந்த உலாப் பிரபந்தம் இப்போது பதிப்பு எய்தும் திருவேங்கட வுலாவே யாகும். திருவேங்கடத் திருப்பதியின் பெயரால் நிலவித் திருவேங் கட முடையான் பெருந்திருநாள் திருத்தேருலாவினைச் சிறப்பித்துப் பாடி, அப்பெருமான் ப்வனி கொண்டருளத் தொடங்கும் திருமஞ் சன காலத்தில் சேவித்தற் குரியதாக அமைந்துள்ளமையால் பெரு மாள் திருச்செவி சார்த்தியருளுதற் குரிய உரிமைப் பேறுடைத்தா யது இப் பிரபந்தமே யாகு மென்பது ஒருதலை.

இனி, கல்வெட்டுள் "கந்தாடை இராமனுச அய்யங்கார் பே ரில் உலா" என்றிருத்தல் என்னையோ எனின், அக்கல்வெட்டு ஏழா வது வரியில் "இராமானுச அய்யங்கார் உலா" என்றே இருத்த லால், அத்தொடர் "கபிலர் பாட்டு" என்ற தொடர் போலச் செய் யுட் கிழமைப் பொருளதே யாமெனக் கொண்டு இராமானுச அய்யங் கார் பாடிய உலா என்று பொருள் கூறின், இத்திருவேங்கட வுலாப் பிரபந்தம் திருவேங்கட முடையான் திருவடித் தொண்டு பூண்ட ஆசாரியப் பெரியார் ஆகிய கந்தாடை இராமானுச அய்யங்கார் பாடி அப்பெருமான் திருச்செவி சார்த்தி யருள அருளிப்பாடு கொண்டது எனத் தட்டறக் கொள்ளலாகும். திவ்வியகவி பிள்ளைப் பெருமாள் ஐயங்கார் கூறியருளியவாறு ஆழ்வார்கள் செந்தமிழை ஆதரித்த வேங்கடப் பெருமான், ஆசாரிய புருடர் ஆகிய கந்தாடை இராமா னுச அய்யங்கார் திருவாக்காக அமைந்த இவ்வுலாவையும் திருச் செவிக் கொள்ள இசைந்தருளினன் என்னலாம்.

இனி, இப் பிரபந்தத்தின்கண் 191-ம் கண்ணியில்

"அஞ்சனவெற் பாளற் ககலாம லூழியஞ்செய்
மஞ்சன காலத்திரா மானுசனும்"

என்று அப் பெரியார் குறிக்கப் பெற்றுமிருத்தலின் அப்பெயரைச் சுட்டியுள்ள இப் பிரபந்தத்தை அவர்க்குப் பல ஆண்டுகள் பின் வந்த கந்தாடை அப்பாச்சி அண்ணு அய்யங்கார், அவர் பெயரால் அமைந்ததென மேலோட்டாகக் குறிப்பித்தனர் என்னவுமாம். இக்

கல்வெட்டின் வாசகம் இவ்வாறு இருதிறனுகை இருந்ததாயினும், இதன் கருத்து திருவேங்கட முடையான் திருமஞ்சன காலத்துத் திருச்செவி சார்த்த அருளிப்பாடு கொண்டது இத் திருவேங்கட வுலா என்பதே யாமெனக் கொள்ளுக.

மேற் காட்டிய கல்வெட்டினும் இந்நூலினும் குறிக்கப் பட்ட கந்தாடை இராமானுச அய்யங்கார் என்பார், வைணவ சம்பிரதாயத்தில் பெரிய ஜீயர், வரவரயோகி, அழகிய மணவாளமுனி எனப் பாராட்டப் பட்ட மணவாள மாமுனிகளின் திருவடி ஸம்பந்தி யாகி விசய நகர இராச்சிய மன்னனுகிய சாளுவ நரசிம்மன் காலத்தில் அவன் போற்றுதலைப் பெற்றுத் திருவேங்கடத் திருமலையில் இராமானுச கூடத் தலைவராகவும், தென்கலை வைணவாசாரியராகவும் விளங்கியவர் என்பது அம் மன்னன் காலத்துக் கல்வெட்டுக்களால் அறியலாம். இந்நூலின் தொடக்கத்துள்ள குருபரம்பரைத் துதியும் நூலினுள் குறித்துள்ள வைணவ சம்பிரதாயச் செய்திகளும் இந் நூலாசிரியரின் பழுத்த வைணவப் பிரபத்தியையும் புலமையையும் காட்டுகின்றன. தலவிசேடம் கூறும் பகுதியில் ஏழுமலைகளையும், அங்குப் பேறு பெற்ற முனிவர்களையும், தீர்த்த வைபவங்களையும், சுப்பிரமணியன் சிவனு ருரைப்படித் திருமலையில் திருமாலைத் தொழுது வரங் கொண்ட திறத்தையும், பெருமாள் திருக்கோனேரித் தென்கரையில் வைகுந்த விமானத் தெழுந்தருளிய திறத்தையும் தல புராணச் செய்திக்கு ஒப்பக் கூறியுள்ளார். பின்னர் திருவேங்கடமுடையான் அற்புதத் திறங்களைப் பரவிப் பாராட்டு முறையில், செண்பக வாசற் கோன்—(36-ம் கண்ணி), 'அத்தாணிப் புளியினுன் (37)' 'மலை குனிய நின்முன் (37)' "புழுகொழுகு மேனியான்", காணிக்கை நித்தல் பத்தாயம் நிரப்புவான் (40), "தொண்டரெலாம் வந்து பதங் கண்டு போமென்று காங் காட்டுவான் (41) என்று பாடிய புகழுரைகள் திருமலையில் அப்பெருமான் கொண்டருளிய திருக்கோலம் பற்றிய அருமைப் பாராவுதல் பெயர்களாகும். இவைகள் திருமலையிலுள்ள கல்வெட்டுக்களிலும் பலபடியாகக் காணப்படுகின்றன.

இப் பாராவுதற் பகுதியில் "வெறுங்கை வேடன் பெரிய வேங்கடத்து வாணன்" (42) என்று ஒருபெயர் குறித்துள்ளார் இப் பிரபந்தகாரர். இதற்குரிய வரலாறு சம்ஸ்கிருதம், தெலுங்கு, கன்னட மொழிகளிலுள்ள வேங்கடாசல மாஹாத்மியம், இதிகாசமாலை ஆகிய நூல்களிலேனும் தல புராணத்திலேனும் காணப் பெறவில்லை.

ஆயினும் ஸ்ரீராமாநுஜருடைய மாதுலராகிய பெரிய திருமலை நம்பியின் முன்பு திருவேங்கட முடையான் ஒரு வேட்டுவச் சிறுவனாகத் தோன்றியருளிய ஐதிகம் ஒன்றுண்டு. அவர் தம் ஆசிரியராகிய ஆளவந்தாரின் ஆணைப்படித் திருமலையில் திருவேங்கட முடையானுக்குக் கைங்கரியம் புரிந்து வந்த காலத்தில் பாபநாச தீர்த்தத் துறையினின்றும் திருமஞ்சன தீர்த்தம் கொண்டு வருவது வழக்கம். ஒருமுறை தன் தலையிலிருந்த திருமஞ்சன தீர்த்தக் குடம் பளுவு குறைந்துள்ளதனைக் கண்டு வியந்து திரும்பிப் பார்த்த அளவில் ஒரு வேட்டுவச் சிறுவன் தன் தோளில் வில்லும் அம்பு முடையனாய்த் தீர்த்தக் குடத்தில் தான் அம்பாலிட்ட துளைவழித் தாரையாய்ச் சொரியும் நீரினைத் தன்னிருகையாலும் முகந்துண்டு வருதலைக் கண்டார். எம்பெருமானுக் குரிய திருமஞ்சன தீர்த்தத்தை வேட்டுவச் சிறுவன் இழவிழிவு செய்தா னென்று வருந்தி நிற்க, வேட்டுவச்சிறுன் பரிவுடன் அவர் முன்னெய்தி "தாத்தா" என அருமையாய் விளித்து "நான் அம்பு விடும் எல்லையில் ஆகாச கங்கை யுள்ளது: அது நமக்கு உகந்த தீர்த்தமாம்" என்று கூறிக் கடிதின் மறைந்து விட்டான் என்பது அவ்வைதிகம். 'நமக்கு உகந்த தீர்த்தமாம்' என்றமையால், திருவேங்கடமுடையானே இங்ஙனம் தோன்றிக் கூறியருளியதாகப் பெரியோர் கருதினர். வில்லும் அம்புங் கொண்ட இவ் வேட்டுவத் தோற்றம், இங்குக் குறித்துள்ள 'வெறுங்கை வேடன்' என்ற பெயருக்குப் பொருந்து மாறில்லை.

இப் பிரபந்தகாரர் அவ்வேட்டுவத் திருக்கோலத்தில் பெரிதும் ஈடு பாடுடையராய் இந்நூலின்கண் பின்னும் இருமுறை "கன்னமிட்டு வேடு பகிர்ந்த வெறுங்கையான்" (390), என்றும், "வெறுங்கை வேடனெனும் பேரினிமேல் வேண்டாவோ" (417) என்றும் கூறுகின்றா ராதலின் இவ்வாலாறு பிறிதாதல் வேண்டும். "கன்னமிட்டு வேடு பகிர்ந்த வெறுங்கையான்" என்றுள்ள தொடர் இதன் வரலாற்றை ஒருவாறு புலப்படுத்துகிறது. இதற்குச் செம்பாகமாகப் பொருள் காணின், "களவுத் தொழில் கொண்ட வேடுவர் தாம் களவு கொண்ட பொருள் பகிர்தலின், வெறுங்கைய னாக்கிய வேட்டுவ" னென்று கருத்துக் கொள்ளுதலே பொருத்தமாகும். இவ்வாறாயின் திருவேங்கட முடையான் முன்பு கள்வர் மலையாக விருந்த வடவேங்கடத்தில் கோயில் கொண்டருளிய தலைநாளில், அவர் குழுவினுள் தானும் கலந்து இணக்க முற்றுக் களவுத் தொழில் புரிந்து தாம்

கொண்ட கொள்ளை பகிர்தலின்கண் அத்தொழிலுக்குப் புதியோ ஞகிய தான் களவிற் கன்றிய அவர்களால் ஏமாற்ற முற்று வெறுங் கைய ஞயினன் என்பது கருத்து ஆகும். இவ்வாலாறு அக்காலத் துப் பெருவழக்கா யிருந்தமை பற்றியே இப் பிரபந்தகாரர் அத் துணைப் பாராட்டிப் பரவியுள்ளார். அகநானூறு ஆகிய சங்க நூலில் "கழல்புனை திருந்தடிக் கள்வர் கோமான், மழபுலம் வணக்கிய மாவண் புல்லி, விழவுடை விழுச்சீர் வேங்கடம்" (61) என்றும், "கல்லா விளையர் பெருமகன் புல்லி, வியன்றலை நன்ஞட்டு வேங் கடம்" (83) என்றும் குறித்துள்ளமையால் வடவேங்கடம் பண்டு கள்வர் நிலமாக இருந்தமையும், 'புல்லி' என்ற கள்வர் தலைமகன் ஆட்சியின் அமைந்தமையும், அக்கள்வர்கள் தெய்வம் பராவி விழாக் கொண்ட செய்தியும் தெரிகின்றன. ஆதலின் பின்பு அங்குக் கோயில் கொண்டருளிய எம்பெருமான் அந்நிலத்து வேட்டுவருடன் அவர் வினைமேற் கொண்டு அவர் வியக்க விளையாடல் புரிந்தனன் போலும். பெரிய திருமலை நம்பி முன்பு தோன்றிய அவ் வேட்டு வத் திருக்கோலமும் அத்தலைநாட் காலத்து அடுத்து நிகழ்ந்தமை நோக்கின் அத்திருவிளையாட்டின் நிகழ்ச்சியும் சிறப்பும் நன்கு புலப் பாடாகும்.

இப் பிரபந்தகாரர் இப்பிரபந்த முடையானை "வடமலையான்" (காப்பு) "வடமாமலையான்" (261), 'வடமலையான்' (607) என்று பலபடியாய்ப் பாராட்டுவர். இஃது என்னெனின், தொல்காப்பியப் பாயிரம், இசை நுணுக்கம், சிலப்பதிகாரம், கம்பராமாயணம், வில்லி புத்தூரார் பாரதம் முதலிய தொன்னூல்கள் இவ் வேங்கடம் தமிழ் நாட்டின் வடக்கு எல்லை மலையாக அமைந்த அடிப்பட்ட வழக்கினைக் குறிப்பதனைத் தெரிந்த உலக வழக்கால் நன்கு தெளிவித்தற்கே யாகும். இனி அவர் பிறுண்டு "அருட் புனைந்த வேங்கடக் கோட்டத் தான்" (44) என்றும், தசாங்கம் கூறுமிடத்து, "எழில் வேங்கட மலையான், அன்னமெழு பொன்முகரி யாற்றினன்—செந்நெல்விளை— நல்ல திருவேங்கடமூர் நாட்டினன்" என்றும் கூறி விளக்குவது தமி ழகத்தின் வடக்குப் பகுதியாய தொண்டைநாட்டு 24-கோட்டங் களுள் திருவேங்கடக் கோட்டம் ஒன்று என்றும், அத்திருமலை அக் கோட்டத்துக் குடவூர் நாட்டுள்ள பொன்முகரி யாற்றிற் கடுத்து நின்று தொண்டை நாட்டுத் திருமால் திருப்பதிகள் இருபத்து நான்க னுள் ஒன்ருகவுள்ள தென்றும் புலப்படுத்தற்கே யாமென அறிக.

கி. பி. 1700-க்கு முற்பட்ட பிரபோதச் சந்திரோதயம் என்னும் மெய்ஞ்ஞான விளக்கம்—விவேகன் ஒற்றுக் கேள்விச் சருக்கத்து 78-ம் செய்யுளில்

" கடன்மல்லை திருவல்லிக் கேணிபுட் குழிநகரங் கடிகை யெங்கோ [பால் "
னிடவெந்தை வேங்கடமா மலைதொண்டை நாட்டிவையோ ரெண்மூன் றப்

என்று தொண்டை நாட்டிலுள்ள திருமால் திருப்பதிகள் இருபத்து நான்கனுள் திருவேங்கடமலை ஒன்றாகு மென்று நன்கு தெளிவித்துள்ளதனை இங்கு நோக்கிக் கொள்ளுக. இக்காலத்தும் சேது சம்ஸ்தான மகா வித்துவானும் பாஷா கவிசேகராரு மாகிய ஸ்ரீரா. ராகவையங்காரவர்கள் தமது நூற்றெட்டுத் திருப்பதிப் பாடலுள்

" ஊரக மட்ட புயகர மத்தி
யூர்கச்சி வேளுக்கை பாடகந் தண்கா
நீரகம் புட்குழி நீர்மலை வெஃகா
நின்றவூ ரெவ்வுணி லாத்திங்கட் டுண்டம்
காரக மிடவெந்தை கள்வனூர் கடிகை
கடன்மல்லை திருவல்லிக் கேணிகார் வானம்
வார்பர மேச்சுர விண்ணகர் பவள
வண்ணநல் வேங்கடந் தொண்டையெண் மூன்றே "

என்று தொண்டை நாட்டு இருபத்து நான்கு திருமால் திருப்பதிகளுள் திருவேங்கடமலை ஒன்று என்று ஐயமறத் தெளியக் கூறி யுள்ளது காண்க. இவ்வாறாகவும் வேங்கடம் வடநாடு சேர்ந்தது எனச் சிலர் வாதிப்பது வாலாற்றொடு பொருந்தா வறுமொழி யாகும்.

திருவேங்கட முடையானைப் பாராட்டுந் திறத்தில் பிரபந்தகாரர் அசுவினி முதல் இரேவதி யீறாக வுள்ள இருபத்தேழு நாண்மீன் பெயர்களையும் இரட்டுற மொழிதலால் தொனிநயம் தோன்றச் செய்யுள் அமைத்திருப்பது இதற்கு ஒரு தனிச் சிறப்பாகும். இதன் பின்னர் பன்னிரு இராசிப் பெயர்களும், ஏழு கோள்களின் பெயர்களும், பன்னிரு திங்கள்களின் பெயர்களும் மேலது போன்றே சிலேடையில் அமைந்த பகுதி யுள்ளது. இது பின்னுள்ளோர் இயற்றிச் சேர்த்த இடைச் செருகல் ஆகும். இப் பகுதியில் பல கண்ணிகளில் வெண்டளைக்குரிய இலக்கண மமையாது தளை வழுப்பட்டுள்ளமை காணத்தக்கது. இப் பகுதி யான் கண்ட கை யெழுத்துப் பிரதிகளி லில்லை.

இனி, சொன் மடக்காக அமைந்த அப் பெருமான் பாராட்டுப் பெயர்களும், திருமலையில் அமைந்த இட விசேடங்களின் சிறப்பும் அறிஞர் படித்து இன்புறத் தக்கன. எம்பெருமான் திருத்தேர்ப் பவனிக்கு முன் கொண்டருளும் திருமஞ்சனம், திருக்கோலம் முதலிய திறங்கள் அவ்வண்ணமே சிறந்துள்ளன. திருக்கோலம் கொண்டருளிய பின்பு பெருமான் கண்ணாடியுள் தன்வனப்புக் காணுதலும், அருச்சனை கோடலும் அடுத்துக் கூறப்பட்டுள்ளன. இங்குத் திருமங்கை யாழ்வாரைச் சந்நிதியில் அருச்சனைக் காலத்து எழுந்தருளுவித்த செய்தி வந்துள்ளது. இவ்வழக்கம் அந்நாளின் ஏற்பட்டதற்குரிய காரணம் கருதத் தக்கதாகும். பெரிய திருமலை நம்பி பெருமாள் திருமஞ்சனத்துக்குத் தீர்த்த குடம் எடுத்து வருங் காலங்களில் திருமங்கை மன்னனார் பெரிய திருமொழியை அநுஸந்தித்துக் கொண்டே வந்த வழக்கம் பற்றி அத் தெய்வத் திராவிடத் திருமறையைத் திருவாய் மலர்ந்தருளிய திருமங்கை யாழ்வார் திருவுருவை அக்காலத்துப் பெருமாள் திருமுகப்பில் சேர்ப்பித்தார்களென எண்ணக் கிடக்கின்றது. இஃது இக்காலத்து நடைமுறையி லில்லை.

திருவேங்கடமுடையான் பவனி வருணனையில்,

"கோமே தகமகுடங் கோலமெல்லாம் பொற்கலிங்க
மாமேரு வொத்த மணித்தேரிற்—றூமே
திருமார் பிரியாத தேவியுட னேறி
யிருதே வியர்க்கொருதே ரீய்ந்து"

என்று வந்துள்ள வரிகள் இப்பிரபந்தம் செய்த காலத்தில் திருமலைப் புரட்டாசித் திங்கள் பெருந் திருநாளில் பெருமாள் திருமாமகளொடு ஒரு தேரில் பவனி கொண்டருளினர் என்றும், மற்றை யிருதேவியராகிய நிலமாமகளும் நீளைப் பிராட்டியும் பிறிதொரு தேரில் பவனி கொண்டருளினர் என்றும் தெரிவிக்கின்றன. இவ்வழக்கமும் இக் காலத்து நடைமுறையி லில்லை.

இந் நூலாசிரியர் பவனிச் சிறப்பினைப் பன்னிய பகுதியில், வைணவச் செல்வத்தை வாய்ப்புறப் போற்றிய சிறப்புக்கள் நன்கு புலனாகின்றன. கோயில் நடை முறைகள் குலவித் தோன்றுகின்றன. ஸ்ரீ வைகுண்டத்துள்ள நித்திய சூரிகளும், பதினைந்து பாகவதோத்தமர்களும், ஆழ்வார்களும், எதிராஜராகிய ஸ்ரீ ராமாநுஜரும் ஆநந்தக்கண்ணீர் வார, ஸ்ரீ ஆண்டாள் சூடிக்கொடுத்த திருத்

தொடையல் வீசக் கூடி நிற்கச் சிறந்து பவனி விளங்கியது என்ருர். திருவேங்கட முடையான் செங்கோலும் மலையப்பன் இலச்சினையும் கையிற் கொண்ட கோயில் சீகாரியம் செய்வோர், மண்டப முன் வரிசைக்கார மாண்பினர் எழுபத்திருவர், பாஞ்சராத்திராகமமும் வைகானஸாகமமும் வல்ல பெரியர், கோயில் கேள்வியாளர் ஆகிய பெரிய ஜீயர், சின்ன ஜீயர் என்ற மாதவர்கள், ஏகாங்கியர் இருபத்து நால்வர், பஞ்ச சம்ஸ்காரம் புரிந்தாதரிக்கும் எழுபத்து நான்கு சிம்மாஸனதிபர்கள், ஸ்ரீ நாதமுனி கோத்திரத்தவர்களாகிய கோயில் விண்ணப்பகாரர், புல்லாணிப் பெருமான், மஞ்சன காலத்தி ராமானுசன், திருவாண்டெழுத்துக்காரர், செண்பக வாசற் காப்பவராகிய கைக்கோளர், திருவந்திக் காப்புக் காலத்தில் தமிழ்ப் பிரபந்தாதிகள் பாடும் தளிப் பெண்டிர் முதலியோர் அப்பவனியில் அணி பெறப் போந்தார்களென ஆக்கால வான் முறைகளைச் செவ்வையாய்க் கூறியுள்ளார். இவர்களுள் புல்லாணிப் பெருமான் என்பாரும், மஞ்சன காலத்தி ராமானுசன் என்பாரும் திருமலையில் மன்னர் மதிப்புக் குரியராய் வாழ்ந்த பெரியார்களென்று கல்வெட்டுக்களால் அறியப்படுகின்றது. திருப்புல்லாணி தாஸர் என்பார் வீர நரஸிம்ம யாதவராயர் காலத்தில் தேர்த்திருப்பணி, கோயிற்றிருப்பணி முதலியவை செய்தவர் ஆவார். மற்றவர் கந்தாடை இராமானுசய்யங்காரெனப் பெயர் சிறந்து மணவாள மாமுனிகளின் சிறந்த சீடராய்ச் சாளுவ நரஸிம்ம ராஜபுரோகிதராய்த் திருமலை இராமானுச கூடக் கண்காணிப்பாளரா யிருந்த பெரியாரென முன் கூறியோமே.

இப் பிரபந்தகாரர் ஒவ்வொரு பருவத்தையும் பற்பல நயந் தோன்ற வருணித்துள்ளமை அறிஞர்க்கு மிக்க இன்பம் அளிப்பதாகும். மடந்தைப் பருவத்தில் திருவேங்கட முடையான் அற்புதத் திறங்களைக் கூறியமையும், அரிவைப் பருவத்தில் திருவேங்கடமுடையான் திருவிழாக் காலத்து ஒவ்வொரு நாளினும் எழுந்தருளும் ஊர்திகளின் முறைமை வழக்கினைக் காட்டியமையும், பத்து அவதாரங்களையும் சிறப்புற்ற திருப்பதிகளையும் எடுத்துரைத்தமையும் குறிக்கொள்ளத் தக்கன.

பவனிக் குழாத்துள் பொய்கை யாழ்வார் முதல் மதுரகவி யாழ்வாரீருக ஆழ்வார்கள் யாவரும் சிறப்பக் குழுமிப் போந்தன ரெனக் கூறிய இப் பிரபந்தகவி, நம்மாழ்வார், திருமங்கை மன்னனர், ஆண்டா ளிவர்களைப் பிரூண்டும் சிறப்பாகப் போற்றுகின்ருர்.

"தேமறைக்குள் வாழ்வான நற்பொருளை வாக்கினால் வாரிவடித், தாழ்வார் திரட்டு மமுதத்தை" என்று நம்மாழ்வார் 'இழைத்தா ரொருவரு மில்லா மறைகளை யின்றமிழாற் குழைத்துத்' தந்த அருஞ் செயலைப் பாராட்டினர். "பாடலிலே கற்க மதுரிக்க நடைகாட்டுஞ் சடகோப னற்கவிதை போலு நடையினாள்" என அவர் திருப்பாட லின் சிறப்பினைப் பின்னும் புகழ்ந்துள்ளார். திருமங்கை மன்னனார் நெடுமாலை எழுத்தெட்டும் பறித்த பறியினையும், ஆண்டாள் திருப் பாவை திருமொழிப் பாசுரங்களையும் பன்னி மகிழ்கின்றார். தாம் திருவேங்கட முடையான் திருவருளால் முதுக்குறைவும் கவித்திற னும் பெற்றுள்ள மெய்ம்மையை "என்புலமை நாட்டினான்" (88) என்றும், "நல்லறிவை என்னிற் சிறியார்க்கு மீவான்" (388) என் றும் கூறிப் புலப்படுத்துகின்றார்.

இப் பிரபந்தத்தைப் பதிப்பிக்கத் தொடங்கிய போது காலஞ் சென்ற மகாமகோபாத்தியாய தாக்ஷிணாத்திய கலாநிதி டாக்டர். உ. வே. சாமிநாதையரவர்கள் தாம் சில ஏட்டுச் சுவடியைப் பார்த் துப் பிரதி செய்து வைத்திருந்த கடிதக் கையெழுத்துப் புத்தகத்தை அவர்கள் புதல்வர் திரு. S. கலியாணசுந்தரம் ஐயாவர்கள் B.A. அன்பு கூர்ந்தனுப்பி யுதவினார்கள். அதனை வைத்துக் கொண்டு என் பிரதிகளுடன் ஒப்பு நோக்கியபோது சில வேறு பாடங்கள் கண்டு குறித்துக் கொண்டேன். சிலேடையில் வந்துள்ள பன்னிரு இராசிப் பெயர்கள் முதலியவற்றைக் கொண்ட கண்ணிகள் 56 முதல் 81 முடியவுள்ள பகுதி முழுதும் அப்பிரதியி லில்லாமை கண்டு அஃது இடைச் செருகல் என்று யான்முன் துணிந்தது உறுதியே யாமெனத் தெளிந்தேன். அவர்கள் கையெழுத்துப் பிரதி கலிவெண்பா வடி களில் பல தனிச்சொற்கள் வீழ்ந்தபடி பெயர்த் தெழுதியதா யிருந்த தாயினும் இத்துணிவிற்கும் சில பாடங்கட்கும் உதவியா யிருந்தது. அவர்கள் உரிய காலத்துப் பிரதி யுதவிய பெருந்தகைமையைப் போற்றுகின்றேன்.

யான் பார்த்த சுவடிகளிலேனும் டாக்டர் ஐயர் அவர்கள் கையெழுத்துப் பிரதியிலேனும் நூலாசிரியருடைய பெயர் காணப் பெறவில்லை. ஏட்டுச் சுவடி யிறுதியில் "புலியூர் ராமானுசம் பிள்ளை யவர்களுக்காக திருநீர்மலை ருமகிருஷ்ண ஊவை ஏறியருளப் பண் ணிய திருவேங்கடவுலா சம்பூரணம். ௨" என்று எழுதியிருந்தது.

ஏறியருளப் பண்ணிய என்ற தொடர்மொழி எடு பெயர்த்தெழுதிய மையைக் குறித்ததன்றி இயற்றியோரைக் குறித்த தன்றும்.

திருவேங்கடேசுவரன் கீழைக்கலை யாராய்ச்சிக் கழகத்துத் தமிழ்ப்பகுதி மந்திரத் துணைவராகிய உயர்திருவாளர் S. சச்சிதானந்தம் பிள்ளையவர்கள் B.A., L.T., (அண்ணாமலைப் பல்கலைக் கழகப் பதிவாளர்) திருவேங்கட முடையானைப் பற்றிய தமிழ்ப் பிரபந்தங்கள் பலவும் எஞ்சாது திருந்திய முறையில் வெளிவர வேண்டுமென வற்புறுத்துரைத்துள்ளார்கள். அறிவாற்றல்களில் குறைபாடுடைய எளியேன் அக்கட்டளைப்படி இப் பிரபந்தப் பதிப்புக்குக் கிடைத்த சுவடிகளின் பாடத்தைக் கொண்டு குறிப்புரை ஒன்று புதிதாக எழுதிச் சேர்த்து ஒருவாறு பதிப்பித்துள்ளேன். இத் தமிழ்ப் பணியில் நல்லறிவுடைய பெரியோர்கள் பிழைகள் காண நேரின் பொறுத்தருளிச் செப்பம் செய்து கொள்ளுமாறு வேண்டுகின்றேன். ஒண்மையும் பழமையும் ஓர்ப்புறு மருமையும் வாய்ந்த இவ் வுலாப் பிரபந்தத்தைப் பதிப்பித்து வெளியிடும் பணியி லெளியேனை யீடு படுத்தியருளிய திருவேங்கடமுடைய எம்பெருமான் பொன்னடிகளைப் போற்றி வணங்குகின்றேன்.

தி. பொ. பழனியப்ப பிள்ளை,
தலைமைத் தமிழாராய்ச்சியாளன்.



---

கு - பு. இறுதித் தாளிற் குறித்த பிழைகளைத் திருத்திக்கொள்க.

ஸ்ரீ:

ஸ்ரீமதே ராமாநுஜாய நம:

# திருவேங்கடவுலா.

### காப்பு வெண்பா.

மருவுலா வுந்தார் வடமலையான் மீதே
திருவுலா வொன்றடியேன் செப்பக்—குருகையர்கோன்
காப்பரவின் காப்புவணன் காப்பனுமன் காப்புமயங்
காப்புனிதன் காப்பனுசன் காப்பு. (1)

### அவையடக்கம் வெண்பா.

கோடியுலா வேங்கடத்திற் கொண்டலெனக் கொண்டாற்குத்
தேடியுலா வொன்றடியேன் செப்புதலே—நாடி
யொலியூட்டு மண்டமெல்லா முண்டவயி றுண்ணப்
பொலியூட்டுக் காட்டுவார் போன்ம். (2)

---

(குறிப்புரை). மரு வுலாவும் தார் - மணம் பொருந்திய மாலை. வட மலையான் - தமிழகத்தின் வடக்கின்கண் உள்ள திருவேங்கடமலையில் எழுந்தருளிய கடவுள். குருகையர்கோன் - திருக்குருகூரின் அரசு ஆகிய நம்மாழ்வார். அரவு - ஆதிசேடன். உவணன் - கருடன். அனுமன் - ஆஞ்சநேயன். மயங்காப் புனிதன் - ஆளவந்தார். அனுஜன் - ஸ்ரீ ராமாநுஜ முனிவர். இதனில் 'காப்பு' என்ற சொல் பன்முறை பயின்றது சொற்பொருட் பின்வருநிலை யணியாம். இது குரு பரம்பரைத் துதி.

கொண்டல் - மேகம். கொண்டல் என வேங்கடத்திற் கோடி யுலாக் கொண்டான் - மேகத்தைப் போலத் திருவேங்கட மலையில் கோடியான பவனி கொண்ட பெருமாள். ஒப்புமை - வண்ணப் பண்பு, தொழிற் பண்பு, எண்ணளவு பற்றியது. அண்டம் - உலகங்கள். பொலியூட்டு - களத்துப் புது விளைவு அறுவடையில் படைக்கின்ற முதல் உண்டி. அண்டங்கள் பலவும் உண்டருளிய பெருமானுக்குச் சிற்றளவாய உண்டியளித்தல் குறையே என்பது கருத்து. போன்ம் - போலும் என்ற வினை முற்று: மகரக் குறுக்கம்.

தலவிசேடம்.

1. பூமாலை பொன்மாலை பொற்பொன் பதுமணியின்
மாமாலை பச்சை வனமாலை—பாமாலை

2. சூடுமபி ராமன் சுருதியிலே நின்றுவிளை
யாடுமபி ராம னகிலேசன்—நீடுபசிக்

3. குண்பவள வாய வுலகைக் கவளமிட்ட
வண்பவள வாயன் வளவாய—ஞெண்பதின்ம

4. ரண்டமா லைத்திரளை யண்டத்தோ டுற்றணிந்து
கண்டமா லைத்திரளைக் கண்டமால்—குண்டிகையிற்

5. சந்தியா னத்துச் சலந்தியா னித்துலகை
யுந்தியா னைப்படைக்கு முந்தியா—னந்தியான் (5)

---

1. பூ மாலை - மலர் மாலை. பொன் மாலை - பொன்னால் செய்த மாலை. பொற்பு - அழகு. ஒன்பது மணியின் மாமாலை - நவரத்தினங்களால் அமைந்த சிறந்த மாலை. இது வைசயந்தி மாலையாம். பச்சை வன மாலை - பசுமை ஆகிய துளசியிலை மாலை. பாமாலை - புலவர்கள் பாடல் மாலை.

2. அபிராமன் - அழகிய திருமேனி உடையான். சுருதி - வேதங்கள். அ பிராமன் - உலகு எல்லாம் உணரும் பிரமப் பொருள். அகிலேசன் - உலகங்களுக்குக் கடவுள்.

3. அளவு ஆய உலகை - அளவினுட்பட்ட உலகங்களை. கவளம் - கைப்பிடி உண்டை ஆய உணவு. பவளவாயன் - பவளம் போலச் சிவந்த திருவாய் உடையவன். வள ஆயன் - செல்வம் வாய்ந்த ஆய்க்குலத்தான். பதின்மர் - திருவேங்கடமுடையானைப் பாடிய ஆழ்வார்கள் பத்துப்பேர் (மதுர கவியாரும் தொண்டரடிப்பொடியாரும் நீங்கலாக.)

4. அண்ட - நெருங்க. மாலைத்திரள் - பாடல் மாலைத் தொகுதிகள். கண்ட மாலைத்திரளைக் கண்ட மால் - கண்டசரம் என்ற அணிகலன்களைப் பூண்ட மால். இனி ஒரு வரலாறு குறிப்பதுமாம்: அது வருமாறு:—திருவேங்கடமுடைய பெருமான் ஆழ்வார்களின் திருப்பாடல்களை விரும்பி ஏற்றருளியும் இனிமேலும் தமிழ்த் திருப்பாட்டுகளின் பெருவிருப்பினால் திவ்யகவி பிள்ளைப் பெருமாள் ஐயங்கார் திருப்பாடல் பிரபந்தங்கள் ஆகிய திருவேங்கடத்தந்தாதி திருவேங்கடமாலை இவற்றைப் பெறும் பொருட்டு அவர்க்குக் கண்டமாலை நோய் காட்டிப் பின் தீர்த்தருளி ஆட்கொண்ட செய்தி குறிப்பது போலும் என்பர் சிலர். குண்டிகை - சலபாத்திரம்.

5. சந்தியானத்து - நல்ல தியானத்துடன். சலம் தியானித்து - தீர்த்தத்தைத் தியானம் செய்து. உலகை யுந்தியான் - உலகங்களைத் தோற்றுவித்தோன் ஆகிய பிரமனை. படைக்கும் உந்தியான் - உண்டாக்கிய திரு நாபிக் கமலம் உடையவன். அந்தியான் - அந்திப் பொழுதின் செந்நிற முடைய சிவன்.

6. கோல வுமையுடனே கூடி யமுதருந்தப்
பால னணுகாப் படிகண்டு—வேலவா

7. தாருகனைக் கொன்றவினைத் தாபம்போந் தாரகத்தை
நாரணநா மத்தைநினை நாமத்தை—யோருருவே

8. சொன்ன லனந்தகற்பந் தூய்நீ ரளைந்ததொக்கு
மென்ன வவனவனைங் கேயென்ன—முன்னளில்

9. வாசுகியை வீசையிலே வாதரா சன்சருவ
வீசு மகமேரு வின்பிள்ளை—காசிநகர்க்

10. கங்கைக் கொருதெற்கே காவதமுந் நூற்றிலே
சிங்க மலையாய்த் திருமலையா— யங்காங்க (10)

11. நாரா யணமலையாய் நாகமலை யாய்ஞான
வாராக பூமி மகாமலையா—யாராய்

12. தருமமலை யாமஞ் சனமலையாய்ச் செம்பொற்
கருடமலை யாய்வேங் கடமா—யருளிடப

---

6. கோல உமை - அழகிய பார்வதி. பாலன் - திருப்புதல்வன் ஆகிய சுப்பிரமணியன். அணுகாப்படி - தம்மை அடையாத தன்மை. வேலவா - விளி.

7. தாரகன் - சூரபதுமன் தம்பி ஆகிய அசுரன். வினைத்தாபம் - தீவினைப் பாவம். கந்த புராணம் உற்பத்தி காண்டம் 20-வது தாரகன் வதைப் படலம் பார்க்க. தாரகம் - தரித்தற்கு உரிய திருமந்திரம். நாரண நாமத்தை - திரு நாராயணன் திருப்பெயரை. நினை - தியானம் செய் : ஏவல். அந் நாமத்தை ஒருமுறை செபித்தாலே.

8. அனந்த கற்பம் - அளவு இல்லாத ஊழிக் காலம். தூய்நீர் - பரிசுத்த தீர்த்தம். அளைந்தது - படிந்த தன்மை.

9. வாசுகி - பாம்பு. வீசையிலே - எறியும் போது. வாதராசன் - வாயுதேவன். வேங்கடமலை மகாமேருவின் பிள்ளை என்பதற்குப் புராண கதை.

10. காவத முந்நூறு - முந்நூறு காதத் தொலை. இது முதல் திரு வேங்கட மலைக்குரிய எழு பெயர்கள் ஆகிய சிம்மாசலம், நாராயணாசலம், சேஷாசலம்,' அஞ்சனாசலம், கருடாசலம், வேங்கடாசலம், இருஷபாசலம் என் பவை கூறப்படுவது காண்க. ஆதிவராக சுவாமி எழுந்தருளிய சிறப்பு நோக்கி ஞானவராகபூமி மகாமலை என்றும் சுட்டினர். அங்காங்கம் - சகல அநு போகங்களும்.

13. மாமலையாய் நின்ற வடமலைக்கே யானுரைத்த
நாம நிதியை நவின்றேத்திச்—சேமமெனச்

14. சங்க னுபரிசரன் சத்திகா பாலிசுகன்
சுங்கன் பிருகு துருவாசன்—அங்கிரா

15. மார்க்கண்டன் மாண்டவியன் வாமதே வன்புலகன்
கார்க்கியன் சூதன் கலைக்கோட்டன்—நாற்குசிகன்

16. கோசிகன் வான்மீகன் கும்போ தயன்கணுவன்
காசிபன் றக்கன் கவுதமன்—பாசதரன்

17. நந்தன் பரத்துவச னாரதன் புண்டரிகன்
சந்தன் மரீசி சவுனகன்—அந்தச்

18. சனக சனந்த சனற்குமா ரப்பே
ரனக ரேனக ரனேகர்—தினமவர்கள்

19. வாயுப் பொசித்திருப்ப மற்றோ ரடைபொசித்துத்
தூயதவஞ் செய்யத் தொடங்கினர்—நீயும்போ

20. வென்னப் பிதாவை யிறைஞ்சி யிளவேலோன்
வன்னக் கலாப மயிலேறித்—தென்னிலத்துப்

21. பக்கமதிற் பொன்முகரி பாய்வேங் கடநண்ணிச்
சக்கர தீர்த்தந் தனிலாடி—மிக்கநெடு

---

13. நாமநிதி - திருப்பெயர் ஆகிய செல்வத்தை.

14. சங்கன் முதல் சனற்குமாரன் ஈறாக உள்ள பெயர்கள் திருவேங்கடமலையில் பெருமாள் திருவருள் பெற்றவர்கள். இவ் விருடியர்களின் பெயர்கள் எல்லாவற்றையும் அடைமொழியின்றித் தொடைப்படுத்தமைத்துள்ள கவித்திறம் பாராட்டற்குரியது. இது வகைமுத லடுக்கணி என்று கூறப்படும். அனகர் - குற்ற மற்றோர்.

19. பொசித்தல் - உண்ணல். வாயு - காற்று. அடை - இலைகள்.

20. வன்னக்கலாபம் - பன்னிறம் கொண்ட தோகை. தென்னிலம் - பாரத நாட்டின் தெற்குத் திசையிலுள்ள தமிழ் நாடு.

21. பொன் முகரி - சுவர்ணமுகி என்னும் யாறு. சக்கர தீர்த்தம் - திருமலையிலுள்ள தீர்த்தம் ஒன்றின் பெயர்.

22. மாற்காலை நாற்கால் வணங்கிமணி வச்சிரத்தி
னீர்க்கா லருஞ்சுனையை நின்றேத்தி—வேற்கையாற்

23. சேனை பதிதடத்தைச் சேவித் தெழுதவத்தோர்
தானாடு தீர்த்தந் தலைக்கொண்டு—வானாடு

24. பஞ்சா யுததீர்த்தம் பாவிமுத னாற்றீர்த்தஞ்
செஞ்சார் பிரமதடஞ் சென்றேத்திக்—கஞ்சமடுப்

25. பாண்டவதீர்த் தங்குடைந்து பாவநா சத்தளைந்து
தூண்டு மெலும்புச் சுனைமூழ்கி—நீண்டிழியு

26. மாகாய கங்கை யளைந்து கொடிவழியின்
பாகாய தீர்த்தம் பரிசித்து—வாகாய

27. நாவலூற் றிற்பொருந்தி நல்விண் ணவர்தீர்த்த
மாவலாற் றூவி யளாவியே—பூவிரிந்த

---

22. நெடுமாற்காலை - திருமாலின் திருவடிகளை. நாற்கால் - நான்கு பொழுதுகளினும். இது முதல் திருமலையிலுள்ள பல தீர்த்தங்களின் பெயர்கள் கூறப்படுவது காண்க. திருவேங்கட தலபுராணம் தீர்த்த விபரம் உரைத்த அத்தியாயத்திலுள்ள பாடல்கள் பார்க்க. சுனை - அருவி. தடம் - நீர் நிலை.

23. எழுதவத்தோர் - சப்தருஷிகள். வான்நாடு - தேவர்கள் அடைகின்ற.

24. பஞ்சாயுத தீர்த்தம் - திருமாலின் ஐந்து படைக்கலங்களின் பெயர் வாய்ந்தது. நாற்றீர்த்தம் - அப் பஞ்சாயுத தீர்த்தத்தை அடுத்துள்ள நான்கு தீர்த்தங்கள் - அவை அலாயுத தீர்த்தம், நரசிங்க தீர்த்தம், காசி தீர்த்தம், அக்கினி தீர்த்தம். தீர்த்த விவர அத்தியாயம் - செய். 4. செஞ்சார் - நேரிடம். பிரமதடம் - பிரம தீர்த்தம். கஞ்சமடு - தாமரை நீர் நிலை: பதும தீர்த்தம்.

25. குடைந்து - முழுகி. பாவநாசம் - தீர்த்தப் பெயர். அளைந்து - நீராடி. எலும்புச்சுனை - அத்தி தீர்த்தம். இழியும் - இறங்கும்.

26. ஆகாய தீர்த்தம் - ஆகாச கங்கை. கொடிவழி - கொடிவழித் தீர்த்தம். இதனை அடியார்க்கு நல்லார் சிலப்பதிகார உரையில் சுட்டியுள்ளார்—"வீங்குநீ ரருவி வேங்கடம்"—பார்க்க.

27. வாகு - அழகு. நாவலூற்று - திருமலையின் வாயு மூலையில் உள்ள ஜம்பு தீர்த்தம். விண்ணவர் தீர்த்தம் - தேவ தீர்த்தம். ஆவல் - விருப்பம். அளாவி - முழுகி.

28. வாயவ்விய மச்ச வராகதீர்த் தங்களெனுந்
தோயமெலாங் காயமெலாந் தோய்ந்தேறி—யாயத்

29. தமரர்பாய் கோனேரி யாடிமறை பாடிக்
குமாதா ரைக்கே குறுகித்—தமரகத்தோன்

30. செப்புமெழுத் தெட்டுந் தியானித்து நின்றளவி
லிப்புனித னப்புனித ரெல்லோர்க்கு—மப்பொழுது (30)

31. குண்டலங்க ளாயிரங்கள் கோடீர மாயிரங்கள்
அண்டரண்ட மெய்யிலே யாயிரங்கள்—மண்டலங்கள்

32. வைத்தமுக மாயிரங்கள் வண்பாணித் திண்புயங்க
ளெத்தனை நூ றாயிரங்க ளென்னவே—மொய்த்திலங்கு

33. விண்பூத்த மேகமென்ன மேவிடலு மாதவருந்
தண்பூத் தவிசோனுஞ் சண்முகனும்—கண்பூத்துப்

34. பார்க்கவசு மின்றிப் பரனே தனிமுகமு
நாற்கரமு மாயெமக்கு நல்கென்னக்—கார்க்கமலக்

---

28. வாயு தீர்த்தம், மச்ச தீர்த்தம், வராக தீர்த்தம் என்பவை. தோயம் - நீர். காயம் - மேனி. ஆயம் - கூட்டம்.

29. அமரர் - தேவர்கள். கோனேரி - சாமி புட்கரிணி. குமாதாரை - திருமால் சிறு குமரனாய்த் தோன்றி ஒரு கிழவேதியனைத் தீர்த்தத்திற் படியச் செய்து குமரப் பருவம் கொடுத்தமையால் இப்பெயர் உண்டாயிற்று - திருவேங்கட தலபுராணம் - குமாரதாரிகை மகிமை கூறிய அத்தியாயம் பார்க்க. தமரகத்தோன் - உடுக்கைக் கையிலுடைய சிவன்.

30. எழுத்து எட்டு - திரு அஷ்டாக்ஷர மந்திரம் ஆகிய 'ஓம் நமோ நாராயணாய' என்பது. புனிதர் - பரிசுத்தர்.

31. குண்டலங்கள் - காது அணி. கோடீரம் - திருமுடி. அண்டரண்டம் - அண்டாண்டம் என்பதன் மரூஉ. மெய் - திருமேனி.

32. பாணி - கைகள். புயம் - தோள்கள். மொய்த்து - கூடி. இலங்கும் - விளங்கும்.

33. விண் பூத்த மேகம் - வானில் மலர்ந்த முகில். மாதவர் - பெருந்தவசியர். தண்பூத் தவிசோன் - குளிர்ந்த தாமரை மலரில் இருக்கும் பிரமன். சண்முகன் - ஆறு முகங்களுடைய சுப்பிரமணியன். கண் பூத்து - கண் கூசி.

34. வசம் - இயல்பு. பரனே - கடவுளே. தனி முகம் - ஒரு முகம். நாற்கரம் - நான்கு கைகள். கார்க்கமலம் - மழைக்காலத்துத் தாமரை.

35. கோனேரித் தென்கரைவை குந்தவிமா னத்தெளிதாய்த்
தானே யவதரித்த தம்பிரான்—தேனர் (35)

36. திருவேங் கடத்தாசு செண்பகவா சற்கோ
ஒருவேங் கடத்தி லுறைவோன்—அருளுடைய

37. நித்தன் மலைகுனிய நின்றா னிழல்விலங்காப்
புத்தலரத் தாணிப் புளியினன்—சித்தருள

38. வாச னெழிற்சீனி வாச னமக்கெதிரே
பேசி வரமளிக்கும் பேராளன்—கேசவன்

39. செங்கனி வாயன் திருவேங் கடமுடையான்
மங்கையலர் மேன்மங்கை மார்பினன்—கங்குல்பகல்

40 வெற்றிப் புழுகொழுகு மேனியான் காணிக்கை
நிற்றற்பற் றாய நிரப்புவோன்—பொற்றிகிரி (40)

---

35. வைகுந்த விமானம் - திருக்கோயில் விமானத்தின் பெயர். அவதரித்த - அருளுடன் மேனின்று இறங்கி வந்த.

36. செண்பகவாசல் - திருவேங்கடமுடையான் திருக்கோயில் திருமுகப்பு வாயில். இக் காலத்து இது சம்பங்கிப் பிரதக்ஷிணம் என வழங்கும்.

37. மலை குனிய நின்றான் - உத்ஸவ மூர்த்தியின் திருப்பெயர். விலங்கா - விலகாத. புத்தலர் - புது மலர்கள். அத்தாணி - ஆஸ்தானம். புளியினன் - திருப்புளிய மரத்தின் கீழமர்ந்தவன். இதன் தெய்வத்தன்மை 'நிழல் விலகாதிருத்தல்' எனக் காண்க. சித்தர் - சித்தி பெற்றோர். உளம் - உள்ளம்.

38. வாசன் - வசிப்போன். ஸ்ரீநிவாசன் - திருமகள் அகலாது உறையும் திருமார்பன். அடியார்க்கு நேர் பேசி வரம் அருளும் தன்மை கூறப்படுவது காண்க. கேசவன் - பிரமனையும் சிவனையும் தன் மேனியிலுடையான்.

39. செங்கனி வாயன் - சிவந்த கோவைப் பழம் போன்ற திருவாய் உடையவன். கங்குல் பகல் - இரவும் பகலும்.

40. புழுகு - புனுகுத் தைலக் காப்பு. காணிக்கை - அடியார் பெய்யும் கைப்பொருள். நிற்றல் - நித்தல் என்பது : நாள்தொறும். பத்தாயம் : பற்றாயம் என உள்ளது : பெரும் பெட்டி. பொற்றிகிரி - பொன் மயமான சக்கரப்படை.

41. தொண்டைமா னுக்களித்தோன் றொண்டரெலாம் வந்துபதங்
கண்டுபோ மென்றுகாங் காட்டுவோன்—கொண்டல்

42. வெறுங்கைவே டன்பெரிய வேங்கடத்து வாணன்
சிறந்தபல வானவர்பூ சித்தோன்—நிறைந்தகவி

43. நீழ்வாரத் தேதொழுது நின்று கனிந்துருகி
யாழ்வார்கள் பாடு மணிமலையான்—வாழ்வார்

44. திருப்பதியிற் பாம்பணையான் சித்திரகூ டத்தான்
அருட்புனைந்த வேங்கடக்கோட் டத்தான்—பொருப்பனைய

45. வஞ்சனவெற் பாள னழகப்பி ரானெய்திக்
கஞ்சையிலே பெண்கொண்ட கட்டழகன்—பஞ்சவர்க்குள் (45)

---

41. தொண்டைமானுக் களித்தோன் :— திருவேங்கட தலபுராணம் - 18-வது தொண்டைமானுக்குத் திருவாழி திருச்சங்கு ஈந்த அத்தியாயம் வரலாறு பார்க்க. திருவேங்கடமுடையான் வலப்பால் கீழ்த் திருக்கை தன் திருவடியைக் காட்டும் முத்திரை கொண்ட இயல்பு குறித்தது. கொண்டல் - மேகம்.

42. வேடன் - திருமலையில் ஸ்ரீநிவாசப் பெருமான் வேடுவனாகத் தோன்றிய செய்தி. இந்நூலில் 391, 417-ம் கண்ணிகளிலும் இச் செய்தி குறிக்கப்படுதல் காண்க. வானவர் - தேவர். கவி - பாடல்.

43. நீழ்வாரம் - நீண்ட அன்பு. நீள், நீழ் எனப்போலி. ஆழ்வார்கள் - நம்மாழ்வார் முதலியோர்.

44. திருப்பதி - திருமலை அடிவாரத்து அமைந்த திருநகர். பாம்பணையான் - அங்கு சேஷசயனனாய் அமர்ந்தருளும் ஸ்ரீ கோவிந்தராசப் பெருமாள். சித்திரகூடத்தான் - இப் பெருமான் முன்பு தில்லைத் திருச்சித்திர கூடத்தில் இருந்தமையால் இப் பாராட்டு ஏற்பட்டதென்க. வேங்கடக் கோட்டம் - தொண்டை மண்டலத்து உட்பிரிவு ஆகிய 24-கோட்டங்களுள் திருவேங்கடமலையுள்ள நிலப்பகுதிக்கு இப்பெயர் கல்வெட்டுகளில் வழங்கும். பொருப்பு - மேருமலை.

45. அஞ்சன வெற்பு - அஞ்சனகிரி, அஞ்சனாசலம் என்ற பெயரது. கஞ்சை - தாமரை மலர் இடம். பஞ்சவர் - பாண்டவர்கள் ஐவர்.

46. அச்சுவதித் தேரை யருச்சுன னுக் கோட்டினன்
பச்சுருவன் கோவைப் பரணியான் —இச்சுதரைக்

47. கார்த்திகையென் றேகுந்தி கட்டுரைப்பான் வேதாவின்
வாய்த்த வுரோகிணியின் வர்க்கத்தான்—கோத்தசிலை

48. வேழக்கா னேடி மிருகசிரத் தேயெய்தா
னாழக் கனதாங்க வாதிரையான்—வாழியமண்

49. பூனிபுணர் பூசத்தான் பூசத்தா னுண்மகிழ்வா
னீனரெல்லா மாயி லியம்பரியான்—வானவர்கள்

---

46. இது முதல் 55-வது கண்ணி வரையில் உள்ள அடிகளில் 27 நட்சத்திரப் பெயர்களைப் பெருமாள் திருப்பெயருக்குத் தொனி வகையால் சார்த்தி யுரைக்கும் அழகு மிகப் பாராட்டற்பாலது. அச்சுவதி - முதலாவது அசுவினி நட்சத்திரம் ; குதிரை - அருச்சுனனுக்குத் தேர் செலுத்திய வரலாறு - பாரதம் பார்க்க. பச்சுருவன் - பசிய மேனியுடையான். கோவைப் பரணியான் - கோ வைப்பு அரணியான் எனப் பிரித்துப் பசுக்கள் தங்கும் இடத்துக் காவலுடையான் எனப் பொருள் காண்க. இது பாகவத வரலாறு. கோவை வடம் கொண்ட செப்பினை யுடையான் என்றலுமாம். இத்தொடரில் 'பரணி' என்ற 2-வது நட்சத்திரப் பெயர் தொனித்தல் காண்க. இச் சுதரை - இப் பிள்ளைகளை.

47. கார்த்திகை என்றே - கையிற் கொண்டு காப்பாற்றுவாய் என்று. குந்தி - குந்தி தேவி. கட்டுரைப்பான் - உறுதியுரைக்கப் பெற்றவன். இவ் வடியில் 3-வது கார்த்திகை நட்சத்திரப் பெயர் தொனித்தல் காண்க. காத்தி என்ற இலக்கணச் சொல் 'கார்த்தி' என ரகர ஒற்று விரித்தல் விகாரம் பெற்றதாய்க் கொள்ளுக. இது பாரத வரலாறு. வேதா - பிரமன். உரோ கிணியின் வர்க்கத்தான் - வசுதேவர் மனைவியாய உரோகிணி தேவியின் இனத்தான். இதில் 4-வது உரோகிணி நட்சத்திரப் பெயர் தொனித்தல் காண்க. இது பாகவத வரலாறு. சிலை - வில்லு.

48. வேழம் - யானை. கான் - காடு. மிருகசிரத்தே - மான் தலையில். எய்தான் - அம்பு செலுத்தியவன். இது இராமாயண வரலாறு. இதில் 5-வது மிருக சீர்ஷம் என்ற நட்சத்திரப் பெயர் தொனித்தல் காண்க. ஆழம், பெருமையுடைய அலைகளையுடைய பெருங் கடல். இருப்பு உடையான்-இதில் 6-வது ஆதிரை நட்சத்திரப் பெயர் தொனித்தல் காண்க. மண் - திருமண்.

49. பூ நிபுணர் - உலகில் உள்ள அறிஞர். னகரநகர வெழுத்துக்கள் ஒலிவடிவாலொத்தன. பூச - அணிய. தான் பூச - தானும் அணிய. உலகின் அறிஞர் திருமண் அணிந்து தொண்டராகத்தான் திருமண் அணிந்து உள் மகிழ்வோன் என்க. இவ்வடியில் 7, 8-வது புனர் பூசம், பூசம் என்ற நட்சத்திரங்களின் பெயர் தொனித்தல் காண்க. ஈனர் - கீழோர். ஆயில் - ஆராய்ந்தாலும். இயம்பரியான் - சொல்லுதற்கு அரியவன். இயம்ப வரியான் என்பது மரூஉ முடிபு கொண்டு இயம்பரியான் என நின்றது. இவ் வடியில் - ஆயிலியம் என்ற 9-வது நட்சத்திரப் பெயர் தொனித்தல் காண்க.

50. பூரிமக்த் தானணிகற் பூரத்தா னுத்தரத்தான்
சீரியவத் தன்மணிரா சித்திரையான்—வேரிமழை (50)

51. யன்னவெழிற் சோதியா னுவிசர் காப்பதத்தான்
மன்னனுடன் வந்தாண் மணவாள—னுன்னி

52. யலையத்தி கேட்டை யடுமூல மானேன்
பலபொற்பூ ராடம் பரத்தான்—நிலவாய்

53. நகைக்குமுத்த ராடவெழி னற்குரவை யானன்
மிகைத்ததிரு வோணத்தின் மீதா—னிகைத்தா

50. பூரி - மிருதி. மகத்தான் - யாகபதி. அணி கற்பூரத்தான் நெற்றியில் அணியும் பச்சைக் கற்பூரத்தை யுடையவன். உத்தரத்தான் - பெரியான். இவ்வடியில் 10, 11, 12-வது நட்சத்திரங்கள் ஆகிய மகம், பூரம், உத்தரம் என்பவற்றின் பெயர் தொனித்தல் காண்க. சீரிய - சிறந்த. அத்தன் - தந்தை. மணி ராசித் திரையான் - மணிக் கூட்டங்கள் உள்ள கடலை யுடையவன். வேரி - தேன். இவ்வடியில் 13, 14-வது நட்சத்திரங்கள் ஆகிய அத்தம், சித்திரை என்பவற்றின் பெயர்கள் தொனித்தல் காண்க.

51. எழில் - அழகு. சோதி - ஒளி. ஆவி சாகாப் பதத்தான் . உயிர்கள் சாவு இன்றி இருக்கும் வைகுண்டத்தை யுடையவன். இவ்வடியில் 15, 16-வது நட்சத்திரங்கள் ஆகிய சோதி, விசாகம் என்பவற்றின் பெயர் தொனித்தல் காண்க. மன்னன் - அரசன். இராமாயண பாரத பாகவத வரலாற்று அரசர்களுள் ஒருவர் உடன் வந்து ஆண்ட மணவாளன் என்க. இவ்வடியில் 17-வது நட்சத்திரம் ஆகிய அனுடத்தின் பெயர் தொனித்தல் காண்க. பி - ம். ‘ஆவிசாகற்பத்தான்’.

52. அலை யத்தி - அலைகளையுடைய கடல் அல்லது அலையும் யானை. கேட்டை - கேட்டினை. மூலம் - வாயில். இவ்வடியில் 18, 19-வது நட்சத்திரங்கள் ஆகிய கேட்டை, மூலம் இவற்றின் பெயர் தொனித்தல் காண்க. பொற்பு - அழகு. ஊர் - பொருந்தும். ஆடு அம்பரத்தான் - சிறந்த ஆடையை உடையான்: பீதாம்பரம் உடையான் என்றபடி. இவ்வடியில் 20-வது பூராடம் என்ற நட்சத்திரப் பெயர் தொனிப்பது காண்க. நிலவு ஆய் - திங்கள் ஒளி போலாகி.

53. நகைக்கு முத்தராட - சிரிக்கும் பற்களையுடைய இடையர் மகளிர் உடன் ஆடும்படி. குரவை - கைகோத்தாடுங் கூத்து. ‘குரவை யென்பது கைகோத் தாடல்’. இவ்வடியில் உத்தராடம் என்ற 21-வது நட்சத்திரப் பெயர் தொனிப்பது காண்க. மிகைத்த - சிறப்புற்ற. திருவோணத்தான் மீதான் - திருவோண நாளில் பிறந்தான். “ஓணப்பிரான்” என்றபடி. இதனில் 22-வது திருவோண நட்சத்திரத்தின் பெயர் வந்துளது. இகைத்தாய் - இகல் உடைய துர்க்கை. பி - ம். ‘இகத்தர்’.

54. யிதையவிட்ட மாறு னெனதுபகை வெற்பைச்
சதையவிட்ட பூங்கமலத் தாளான்—குதையம்பா

55. லப்பூராட் டாதி யமரர்க்கா யுத்திரட்டா
திப்பூத னெந்தை யிரேவதிக்கோ—[னெப்போது (55)

56. மேட விளைதாளான் வித்துநூற் றோர்தந்தை
மேடமே யென்ன விரித்தான்வி—சேட

57. மிடபமென வீட்டினு னிடபமே றீச
னிடபணிமு ழுனிடபற் கிறைவ—னிடப

54. இதைய இட்டம் - மன விருப்பம். வெற்பு - மலை. இவ்வடியில் 23-வது அவிட்ட நட்சத்திரத்தின் பெயர் தொனித்தல் அறிக. சதைய - சிதையும்படி. கமலத்தாளான் - தாமரை மலர் போன்ற திருவடியுடையான். குதை - வில்லின் நுனிக்கட்டு அல்லது அம்பின் அடி. இவ்வடியில் 24-வது சதைய நட்சத்திரத்தின் பெயர் தொனித்தல் காண்க.

55. அப்பு ஊர் அட்டு - நீரால் சூழ்ந்த பேரூர் ஆகிய இலங்கையை வென்று. ஆதி அமரர்க்கு - முதிய தேவர் பொருட்டு. உத்து இரட்டாது - போர் இரண்டாகாது. இவ்வடியில் பூரட்டாதி உத்திரட்டாதி என்ற 25, 26-வது நட்சத்திரங்களின் பெயர் வந்துள்ளது காண்க. இரேவதிக்கோன் - பலராமன். இவ்வடியில் 27-வது இரேவதி என்ற நட்சத்திரப் பெயர் வந்துள்ளது அறிக.

56. இக்கண்ணி முதலாக 81-வது கண்ணிவரை 26 கண்ணிகளினும் மேடம் முதலிய பன்னிரண்டு ராசிகளின் பெயர்களும், சூரியன் முதலிய ஒன்பது கிரகங்களின் பெயர்களும், சித்திரை முதலிய பன்னிரண்டு திங்கள் களின் பெயர்களும் மேல் 27 நட்சத்திரப் பெயர்கள் தொனிவகையால் வந்தவாறு வந்துள்ளன. இக்கண்ணிகள் யாவும் ஏட்டுப் பிரதியிற் காணப் பெறாது ஒரு கடிதப் பிரதியிற் காணப்பட்டன. இக் கண்ணிகளுள் சில வெண்பாவடிகள் தளைசிதைய அமைந்துள்ளன. அன்றியும் பொருள் இடர்ப் பட்டுக் கொள்ளும் நிலைமையிலுள்ளது. இவை இந்நூலைக் கற்ற ஒரு புலவர் மேல் கண்ணிகளின் தொனிவகையோடு தாமும் சில உடனமைக்க விரும்பிச் சோதிடப் பொருட்டாக உள்ள இராசிப் பெயர் முதலியவற்றைத் தாமே கூட்டிக் கூறியவை போலக் காணப்படுகின்றன. இந் நூலுட் பிற பகுதிக ளெல்லாம் செவ்வி குலையா தியல இப்பகுதி மட்டும் யாப்புவிதி வழுக்க லுடைமையால் இங்ஙனம் ஐயப்பாடு ஏற்படுதலாயிற்று. ஆதலின் நல்லறி வாளர் இங்குள்ள பாடத்தின் பெற்றி தெரிந்து கொள்ளுமாறு இச்செய்தி தெரிவிக்கலாயிற்று. தாள் - அடி, முயற்சி. நூற்றோர் - நூற்றுவர் ஆகிய துரியோதனாதியர். தந்தை - திருதராட்டிரான். மேடம் - ஆடு.

57. இடபம் - காளை மாடு. இடபம் ஏறு ஈசன் - சிவன். தளைவழு உள்ளது. இறைவன் - தலைவன். இவ்வடியும் தளைவழுவுள்ளது.

58. நகமிதுன தேசமே நண்ணினோ ளொத
மிருமிதுனத் தோன்றுய்ய மேகஞ்—சுகமிருத்த

58. இடபநகம் - இருஷபகிரி. மிதுனம் - இரட்டை.

**குறிப்பு** :—மேற் கண்டவாற்றால் சோதிட நூற்பெயர்கள் சிலவற்றைத் தொனிக் குறிப்புடன் பழமையான உலாப் பிரபந்தம் ஆகிய திருவானைக்கா வுலாவில் அதனை இயற்றிய காளமேகப் புலவர் கையாண்ட முறை சிறந்து தோன்றியமை கண்டு பிற்காலப் புலவர் பலரும் அங்ஙனம் சில தொனிக் குறிப்புகள் தோன்றுமாறு செய்துள்ளார்கள். அந்த வகையில் இவ்வுலாப் பிரபந்தகாரரும் நட்சத்திரப் பெயர்களை மட்டும் தொனிவகையிற் காட்டியிருத்தலைப் பிற்காலத்தார் கண்டு பிற சோதிடப் பெயர்களாகிய இராசி, வாரம், மாதப் பெயர்களையும் தொனிக் குறிப்புடன் தோற்றுவிக்கக் கருதிப் பின்னுள்ள கண்ணிகளைச் செய்து இயைத்தனர் போலும். அவர் யாப்புநெறி நன்குணராக் குறையால் இக் கண்ணிகளுள் பல தளைசிதைய அமைந்துள்ளன. நூலாசிரியரின் சிறந்த வாக்குடன் இடைச் செருகலாக இவை அமைந்த தன்மை இவற்றின் பொருட் சிறப்பில்லா நடையானும் காணலாம். திருவானைக்கா வுலாவில் சோதிட நூற்பெயர்கள் தொனிவகையால் வந்தமை கீழ்க் காட்டும் கண்ணிகளிற் காண்க.

அஉ.................. ......................தக்கதிரு

“வாதிரையான் மூலமறை யத்தத்தான் மகத்தா
ஞேதமெறி நாகைக்கா ரோணத்தான்—சோதியான்
கெச்சைதனி லாடியான் கேதகையொன் றூவணியா
னச்சமனை யன்று புரட்டாசியான்—பிச்சை
யடர்ந்திட்ட மாமுனிவ ராச்சிரமந் தோறும்
படர்ந்திட்ட மையற் பசியான்—கொடுங்கூற்
றெடுக்கைக் குவந்துபிறந் தேங்காத் திகையான்
கடுக்கைத் தொடைமார் கழியான்—பொடிச்சுதையான்
வன்னி வளர்க்குஞ்சோ மாசியான் வஞ்சகமே
பன்னு மவர்நெஞ்சத்தற் பங்குனியா—னன்னீராற்
றீவணத் தங்குஞ் சித்திரையான் சிறுவனையாழ்
காவணத்தி லேனோர் வைகாசியான்—மூவரைவிட்
டப்புரத்தா னூர்க்குமளித்த வுயிரானி யான்”.

இங்ஙனமே சிறுபுலியூ ருலாவினும் ஒரு பகுதி வந்துள்ளமை காண்க.

ருந.-“பன்னகத்தி லாடியான் பண்டுமெமக் காவணியான்
பொன்னனுடல் கீண்டு புரட்டாதியான்—முன்னுலகுண்
கொள்ளைப் பசியான்வெங் கூற்றினடங் கார்த்திகையான்
வள்ளத் தனத்திருவை மார்கழியா—னுள்ளினரை
மீண்டுடம்பு தையான் விதிமறைக்கு மாசியான்
பாண்டவர் போரிற்காண்டீ பங்குனியான்—வேண்டினோர்
தஞ்சித் திரையான் றமிழ்மறை வைகாசியான்
அஞ்சப் புகும்வினைக்கோ ரானியான்”

59. கற்கடகம் வந்தொன்றக் கற்கடகம் போக்கொன்றக்
கற்கடகம் சேர்ந்த கரத்தினன்—கற்கடகன்

60. சிங்கக் கொடியோனைச் சின்னபின் னஞ்செய்தோன்
சிங்கமலை மேவுநர சிங்கனு—சிங்கத்தி (60)

61. லேறுகன்னிக் கேதிகிரி யீந்தோ னிலக்குவனைக்
கூறுகன்னி யாகுமரி கொள்கின்றோன்—வீறுகன்னி

62. மாடத் துலாவுகின்ற மாதுபொருட் டால்வாளி
சூடத் துலாக்கடலைத் தூர்த்தோன்—தாடகையாம்

63. விருச்சிகத்துக் கொப்பான் வீணிதலை பேய்போல்
விருச்சிகத்தை வேவ விடுத்தோன்—விருச்சிகத்துத்

64. தனுசுபடர் நெஞ்சுபோற் றண்ணந் துழாயான்
தனுசுபட்டா வின்பிற் றரிப்போன்—தனுசுவத்தின்

65. மகரகுண்ட லத்தான் மாமகர வாருதியின்
மகரரைவென் றோனைவென்ற மாயன்—மகுடங்கள் (65)

66. கும்பங் குடங்கரிணைக் கொங்கையரைக் கூத்தாட்டுங்
கும்பநி கும்பன்விழக் கோவித்தோன்—கும்ப

67. கருணன் றலையைக் கடன்மீனங் கவ்விக்
கருணமிடத் தூண்டும் கணையான்—கருணையா

68. லாதித் தனைச்சசியை யங்கா ரகன்றன்னைப்
போதித்த நம்புதனைப் பொன்னவனை—வாதித்த

69. வெள்ளி தனைச்சனியை வெட்டுண்ட துட்டர்தமைத்
தள்ளி விடவே சலிகைதந்தோ—னெள்ளிய

70. சித்திரை தானென்றோன் தேவா திபதேவன்
சித்திரைதா னென்றோரைச் சீறுவோன்—சித்திரையாய் (70)

71. வையாசி கூறு மறையோர்கள் சிந்தனையே
வையாசி யீந்த வரதன்—வையகான்

72. றானிய மத்திடவே யாகு கசடர்களுக்
கானிய மத்தை யறிவிப்போன்—நானிலமே

73. லாடி வாரிருந்தா லாகா தெனத்தள்
ளாடிவர வேயாவி லாடிவந்தோ—னடிபா

74. லாவண்ணியைக் கூடாம லாகவரை யேந்திஞே
ஞவணியி லோசைதனி லாசையா—ஞவணியில்

75. வந்தபுராட் டாதியெல்லா மாற்றுவோன் வீடணனே
வந்தபுராட் டாதிலங்கை வைக்கென்ருன்—வந்துபுர (75)

76 மற்பசித்த பேர்களே யாரெவரொன் றன்னமிட்டா
னற்பசிக்குந் தீங்குக் கணுகாதோ—னற்பசிக்குஞ்

77. சிந்தியா ஞேகார்த் திகையார்க்குச் செல்வமே
பந்தியாக் கார்த்திகைக்கா பாலியா—னிந்தையாய்

78. மார்கழியா மாலே மணிமார்வு ளான்மங்கை
மார்கழியா தெய்யு மகன்ருதை—மார்கழியா

79. மாத்தையி லேமலேவான் வானெறியே நேயனுக்கு
மாத்தையிலே சொர்க்கம் வழங்குவோன்—மாத்தையிலே

80. மாசியா வேத வழியா மகம்புரிசோ
மாசியாம் வேதன் வணங்குவோன்—மாசிமாப் (80)

81. பங்குனிக்குப் பிஞ்சு பலிக்குங் குருநாடு
பங்குனிக்கச் சொன்ன பரந்தாமன்]—பங்குனனைத்

82. தேரிருக்கச் சொல்லிச் செலுத்திஞன் தேவருக்குப்
பாரிருக்கச் சொல்லிப் படிவித்தோன்—தாரிருக்குஞ்

83. செப்போ டிருக்குந் திருவிருக்கு மார்பிஞே
னெப்போது மென்னெஞ் சினிலிருப்போ—னப்பேழுங்

84. காயத்தா னெய்தகருங் காயத்தான் மேலேயா
காயத்தா ஞயேன்ச காயத்த—ஞயிரநா

---

81. பரந்தாமன் - விஷ்ணு. பங்குநன் - அருச்சுனன்.

82. இவ்வடி திருமால் அருச்சுனனுக்குத் தேர் செலுத்திப் பார்த்த சாரதி எனப் பெயர் பெற்றமை கூறுவது. தார் - மாலே.

83. செப்பு - பூப்பேழை. திரு - இலக்குமி. அப்பு - நீர். அப்பு எழும் - எழு கடலும்.

84. காய - நீர்வற்ற. கருங்காயத்தான் - கரிய திருமேனியுடையான். இவ்வடி முதல் சொல் மடக்கு வருதல் காண்க. மேலே ஆகாயத்தான் - வைகுண்டம். நாயேன் சகாயத்தான் - அடித்தொண்டனுய எனக்கு உதவியாளன்.

85. மத்தினு னந்தணரோ மத்தினு ஞன்மறைச்சே
மத்தினன் பாலாழி மத்தினன்—மெய்த்தமறை (85)

86. யங்கத்தான் பொற்பாண்ட ரங்கத்தா னெல்லாந்தன்
னங்கத்தான் செங்கைச்சா ரங்கத்தான்—சங்கத்தான்

87. தன்கைத் திகிரியான் றண்ணந் திகிரியான்
தென்கச் சியிலத் திகிரியான்—தன்கைக்கு

88. ளோட்டினு னுண்பலியை யோட்டினன் வைகுந்த
நாட்டினு னென்புலமை நாட்டினன்—கூட்டுமறை

89. நாதநா தன்கிடைக்கு நச்சினு னச்சினன்
வேதவே தன்சபரி மெச்சினன்—கோதிலா

90. ஞாவா ரச்சபையி லாடுவா ஞடுவான்
பாரவா ரன்சுருதி பாடுவா—னீருடுத்த (90)

---

85. ஆயிர நாமத்தினன் - சகஸ்ர நாமன். ஓமத்தினன் - யாகபதி. நான்மறைச் சேமத்தினன் - வேத ரக்ஷகன். பாலாழி - பாற்கடல். மத்தினன் - மந்தர மலையாகிய மத்தினையிட்டுக் கடைந்தோன்.

86. மறையங்கத்தான் - வேதாங்கங்களையுடைய பிரமன். பாண்டரங்கத்தான் - பண்டரங்கக் கூத்தினையுடைய சிவன். எல்லாம் தன் அங்கத்தான் - பிரமன், சிவன் இவர்களை எல்லாம் தன் மேனியில் உடைய திருமால். கேசவன் என்னும் திருநாமப் பொருள் காண்க. சாரங்கம் - வில். செங்கைச் சாரங்கத்தான் - வில்லைத் தன் சிவந்த திருக்கையிலுடையான். சங்கத்தான் - பாஞ்சசன்னியம் என்ற திருச்சங்கினை யுடையான். திகிரியான் - சுதரிசனம் என்ற திருச்சக்கரத்தை யுடையான்.

87. திகிரி - தேர். தென்கச்சி - தெற்கிலுள்ள திருக்கச்சி நகர், அங்குள்ள அத்திகிரியை யுடையான்.

88. ஒட்டினன் உண் பலியை ஓட்டினன் - பிரமன் தலையோட்டினால் சிவன் பிச்சை உண்ணுதலை நீக்கியவன். என் புலமை நாட்டினன் - நூலாசிரியர் தமக்குத் திருமால் திருவருட்பாங்கால் பேரறிவு வாய்த்தமை கூறுகின்றார்.

89. மறையோசையை உடைய தலைவன். கிடை - மறை ஓதும் இடம் : அன்றி ஆடுகளின் கிடை. நச்சினன் - விரும்பினேன். அச்சினன் - அச்சம் உடையான் : அன்றி அச்சிறியோன். வேதத்தால் அறியப்படுபவன். சபரி - என்ற வேட்டுவ மகள் மெச்சுதலை உடையவன் - இராமாயண ஆரணிய காண்ட வரலாறு.

90. சபையிலாடுவான் - சிவன். அவனால் நாடப்படுமவன். பாரவாரன் - கடலிடத்திருப்பு உள்ளவன். சுருதி - வேதம். நீர் உடுத்த - கடல் சூழ்ந்த.

91. வன்னமே யன்னமா மன்னத்தா ளுமருப்புச்
சின்னமே சின்னமாஞ் சின்னத்தான்—பின்னை

92. மணவாளன் வாளன் மதுசூதன் சூதன்
குணவாளன் புட்கோபன் கோபன்—நிணமே

93. பாரவுங் கலப்பை பரசு சரசாப
விராம னிராம னிராம—னராவிற்

94. படியளப்பா னெற்கும் படியளப்பா னண்ட
முடியளப்பா னென்று முடியா—னெடிய

95. வடமா மலையான் வரத்தா னெதிர்கொள்
வடமா மலையான் வரத்தான்—படிபஞ்ச (95)

---

91. அன்னம் - அன்னம் போன்ற பூமிப் பிராட்டி. மண்ணுலகு திருமாலுக்கு உணவாதலின் நயம்தோன்ற அன்னம் ஆம் என்றார். ஆ மருப்பு - பசுவின் கொம்பு. சின்னம் - சிறு துண்டு, ஊது கருவி, அடையாளம் என்ற மூன்று பொருளும் கொள்ளின், பசுக் கொம்பின் சிறு துண்டினை ஊது கருவி அடையாளமாகக் கொண்டவன் என்று கண்ணன் திறம் காண்க. பின்னை - பின்னைப் பிராட்டி. "பின்னை தோண் மணந்த பேராயன்"—ஆழ்வார்.

92. மணவாளன் - மணம் கொண்ட தலைவன். வாளன் - நாந்தகம் என்ற வாட்படை யுடையான். மது சூதன் - மது என்ற அசுரனைக் கொன்றவன். சூதன் - தேரினை ஓட்டுபவன். குணவாளன் - அநந்த கல்யாண குணங்களை உடையான். புட்கோவன் - பகாஸுரன் என்பான் கம்சன் ஏவலால் கொக்கு வடிவாய்க் கண்ணனைக் கொல்ல வந்த போது அதன் வாயலகினைக் கிழித்துக் கொன்றதனால் இப்பெயர் சாற்றினர். கோபன் - இடையன். நிணம் - கொழுப்பு.

93. கலப்பை, பரசு, சரசாபம் - இவை முறையே நிலம் உழுகின்ற ஏர், கோடரி, அம்பு பூட்டிய வில் என்ற படைக்கலங்களைக் குறிக்கும். பின் அடியுள் உள்ள 'இராமன்' என்ற மூன்று பெயர்களும் முறையே கலப்பை, பரசு, சரசாபம் என்பவற்றோடு நிரனிறையாய் இயைந்து பலராமன், பரசுராமன், தசரதராமன் இவர்களைக் குறித்தல் காண்க. நிணமே பராவும் - என்பது மேல் கண்ட முப்படைக் கலத்துக்கும் உரிய அடைமொழியாம். அரா - ஆதிசேஷன்.

94. அராவிற்படி - ஆதிசேஷன் தாங்கும் நிலவுலகம். அதனைத் திரிவிக்கிரமாவதாரத்தில் அளவிட்டான் ஆதலின் 'படியளப்பான்' என்றார். எற்கும் படியளப்பான் - எளியேனுக்கும் அன்றன்று வாழ்க்கைப் பொருள் உதவுவோன். அண்டம் - மேலுலகு. முடியான் - அளவில்லாதவன்.

95. நெடிய வடமா மலையான் - நீண்ட கயிலை மலையான் ஆகிய சிவன். வரத்தான் - வரத்தினாலே. எதிர் கொள்ளும் வேங்கடமா மலையுடையவன். வரத்தான் - வரந்தரும் கடவுள்.

96. பூதங்க ளப்பன் புராணமறை நூற்கப்பன்
மூதண்ட ராசிக்கு முன்னப்பன்—வேத

97. முனிவருக்கு மப்பனொரு மூவருக்கு மப்ப
னனைவருக்கு மப்பனு மப்பன்—றனதாந்

98. திருப்பதியு மாழ்வார்தந் தீர்த்தமும் பூங்கா
விருப்பு மடிப்புளியின் வீறும்—பொருப்படியிற்

99. கோபுரமுந் தெண்ணீர்க் குளிர்மண் டபத்திரளு
மாபெரிய வேற்ற வனப்பாடுஞ்—சோபனஞ்சேர்

100. சிற்றேற் றமுநார சிங்கக்கோ விற்கிரியும்
பற்றேற்ற வேணிப் பழுக்குன் றுஞ்—சுற்றேற்று (100)

101. முந்தியகா ணாறு முழங்கான் முறிப்பானு
மெந்தைகிரி யன்னைக் கிருந்தானு—மந்தக்

96. பஞ்சபூதங்கள் - நிலம், நீர் தீ, காற்று, வானம். இவற்றைத் தோற்றுவிப்போன் ஆதலின் பூதங்கள் அப்பன் என்றார். புராணம் மறை நூற்கு அப்பன் - வேதபுராண வித்தைகளுக்குத் தந்தை என்க. மூதண்ட ராசி - பிரமாண்டக் கூட்டம்.

97. முனிவர் - முற்பட்ட இருடிகள். மூவர் - ஆக்கல், காக்கல், போக்கல் செய்யும் மும் மூர்த்திகள். அப்பன் ஆம் அப்பன் என்ற பாராட்டு காத்தற் கடன் பூண்ட கடவுட் குரியதாகக் காட்டியது போற்றற்பாலது.

98. தனதாம் திருப்பதி - திருமலை அன்றி அடிச்சாரலில் அமைந்த திருப்பதியும் என்றபடி. ஆழ்வார் தீர்த்தம் - என்பது கபில தீர்த்தம் எனப் பண்டு தொட்டு வழங்குவது. பூங்கா - பூஞ்சோலை. அடிப்புளியின் வீறு - தாழ்வரையில் தழைத்து நின்ற திருப்புளிய மாமும் அதன் சிறப்பும். பொருப்பு - திருமலை.

99. அடியிற் கோபுரம் - தாழ்வரை அடிப்படிக் கோபுரம். தெண்ணீர்க் குளிர் மண்டபத்திரள் - தெளிந்த குளிர்ந்த குடிநீர் தட்டின்றி யுள்ள வழியிடை மண்டபத்திரள். வனப்பாடு - தோன்றும் அழகு. சோபனம் = சோபானம் - படியடுக்குகள்.

100. நாரசிங்கர் கோவிற்கிரி - திருமலை வழியிடை அமைந்துள்ள நரஸிம்ம ஸ்வாமியின் சந்நிதி. பிடித்து ஏறுதற்குரிய ஏணி போன்ற பழுக் குன்றும் : சுற்றேற்றும் - சுற்றி ஏறும் இடமும்.

101. காணாறு - காட்டாறு. முழங்கான் முறிப்பான் - என்பது செங் குத்து ஏற்றம் ஆகிய படிக்கட்டுமலை. இது சகாண்டு 1387-ல் அமைந் திருந்ததாகக் கல்வெட்டு காட்டுகிறது. எந்தைகிரி - திருமலை. அன்னைக் கிருந்தான் - திருமலைக்கு அடுத்து முன்புள்ள இட விசேடம்.

பி - ம். பின்னைக்கிருந்தான்.

102. திருமலையும் பட்டணமுந் தெய்வத் தெருவுந்
தருவனமுஞ் சாரலுஞ்செஞ் சாந்துங்—குருகினமுந்

103. தென்ன வனமுஞ் செழும்பாளை யங்கமுகுங்
கன்னலு நெல்லுங் கதலியும்—புன்னையிலே

104. கூவுங் குயிலுங் குளோஞ்சியுஞ்செம் மாதளையு
மாவும் பலாவு மதவேளுங்—காவலரு

105. மன்னநடை யாரு மரிபிளவும் வெள்ளிலையும்
பொன்னு மணியும் புழுககிலுஞ்—சன்னிதியுஞ் (105)

106. செங்கே தகையுந் திருக்கோனே ரிக்கரையுங்
கொங்கேறுந் தென்றற் குளிர்காற்று—மெங்கேயுண்

107. டாரே யினிவே றலங்காரம் பாடுவா
ரரே பிறர்கொண் டலங்கரிப்பா—ரூரே

108. பரமபத மிந்தப் பசையிலா தென்றே
மரகதவெற் பன்மலைக்கு வந்தா—னரிகரியென்

---

102. திருமதில் - பிராகாரச் சுவர். பட்டணம் - சுற்றுக உள்ள சிற்றூர். தெய்வத் தெரு - திருத்தேர் வீதி. தருவனம் - மரங்கள் நிறைந்த தோப்பு. செஞ்சாந்து - சந்தன மரம். குருகினம் - குருக்கத்தி மரக் கூட்டம்.

103. தென்ன வனம் - தென்னந் தோப்பு. பாளை - குருத்து. கன்னல் - கரும்பு. கதலி - வாழை.

104. குளோஞ்சி - கொழிஞ்சி மரம். செம்மாதளை - சிவந்த மாதுளை மரங்கள். மா, பலா - மரங்கள். மதவேள் - மன்மதன். காவலர் - பூஞ் சோலை மலர்கள்.

105. அன்ன நடையார் - அன்னப் பறவையின் நடைபோன்ற நடை யுடைய இள மகளிர். புழுககில் - புனுகும் அகிலும்.

106. கேதகை - தாழை. கோனேரி - சுவாமி புட்கரிணி என்னும் திருக்குளம். கொங்கு - நறுமணம். தென்றல் - தெற்குத் திசையினின்றும் வரும் இளங்காற்று: வசந்தம், மந்தமாருதம் எனவும் படும்.

107. அலங்காரம் - அழகு செய்தல். உள்ள அழகு பாடுவாரும், பிற ரைக் கொண்டு அழகு செய்வாரும் யாரோ என்றபடி - இயற்கை அழகின் வீறு தெரிவித்தபடி.

108. பரமபதம் - விஷ்ணுவின் நித்திய விபூதி இருப்பு ஆகிய வைகுந்தம். பசை - சிறப்பு. மரகத வெற்பன் - மரகத மலையினை ஒத்த திருமேனி உடைய திருமால். மலைக்கு - இத் திருமலைக்கு. அரிகரி என்று - ஹரி ஹரி என்று பெரு முழக்கம் செய்து.

**பவனி.**

109. றெம்பிரான் கம்பத் தெடுத்ததா ளிற்கங்கைக்
கொம்பிழிவ தென்னக் கொடியேற்றி—யம்புயனூர்

110. செய்தபுரட் டாதித் திருநாளி லேயொருநா
ளெய்தியவை குந்தத் தினுமிருந்து—கைசெய்து (110)

111. வாழுந் திருமா மணிமண்ட பத்திருந்தே
யாழுந்து கையா ரிருபாலுஞ்—சூழப்

112. பழம்பணியுங் குங்குமமும் பங்கயமின் பாதச்
செழுஞ்சுவடுந் தண்புழுகுஞ் செச்சைக்—குழம்பாய்

113. நிறைந்தவெல்லா நீக்கிமணி நீலமலை யாக்கி
வெறும்புறத்திற் காட்சி விரும்பி—யறங்கிளருஞ்

---

109. எம்பிரான் கம்பம் - திருமலைப் பெருமாள் திருக்கொடி ஏற்று கம்பம். எடுத்த தாளிற் கங்கைக் கொம்பு - உலகளக்கத் தூக்கிய திருவடியி லிருந்த கங்கைப்பெண். இழிவது - இறங்குவது. கம்பத்துக் கொடியேற்றி என இயைக்க. கொடி ஏற்ற விழாச் செய்தி. அம்புயனூர் - பிரமன்.

110. புரட்டாதித் திருநாள் - புரட்டாசித் திங்களில் நிகழ்த்தும் பிரம்மோத்ஸவம். இவ் விழாவினை முதலில் பிரமதேவன் தொடங்கிய செய்தி தல புராணத்தால் அறிக.

111. திருமாமணி மண்டபம் - திருவேங்கடமுடையான் திருக் கோயில் முன் திரு மண்டபம். இது சகனூண்டு 1339-ல் ஸ்ரீ மாதவதாசர் என்றவரால் கட்டி முடிந்ததென்று கல்வெட்டு காட்டுகின்றது. (Vide No. 88. T. T.) யாழ் உந்து கையார் - யாழ்க் கருவியை இசை கூட்டிப் பாடும் இசைவாணர்கள். குங்குமம் - குங்குமப்பூப் பூச்சு.

112. பணி - அணிகலன்கள். பங்கயமின் - தாமரை மலரில் எழுந் தருளியுள்ள மின்னற் கொடி போன்ற திருமகள். அலர்மேல் மங்கையார் அகலகில்லே னிறையுமென்று அமர்ந்த திருமார்பம் ஆதலால் பாதச் செழுஞ் சுவடு உடையதாம். புழுகு - புனுகு. செச்சை - சந்தனம். இவை திருவேங் கடமுடையான் திருமேனித் தைலக் காப்புக்கும் பூச்சுக்கும் உரியவை.

113. நீல மலையாக்கி - மரகதக் குன்றம் போலத் தோன்றுமாறு செய்து. வெறும் புறத்திற் காட்சி - ஆடை அணி கலவையாதி களைந்த திரு மேனியின் தோற்றம்.

114. செய்யா ணகக்கூர் தெளியவோ வெண்ணெய்தயிர்
நெய்யா டியமுடையை நீக்கவோ—கையார

115. வாகாய கங்கையுட னம்பொற் கடாரநீர்
நீகார நற்கலச நீராட்டித்—தோகையோ (115)

116. டொற்றுடை யெல்லா வுலகலையா தேயொற்றிச்
சிற்றூயர் தாம்பின் செயலெண்ணிப்—பெற்றுரி

117. லள்ளியப்பு கற்பூர மஞ்சனவெற் பிற்சாத்தி
வெள்ளிவெற்ப தாக்கி விசாலமாய்—வெள்ளிவெற்பை

118. யஞ்சனவெற் பாக்கவே'யாரப் புழுகொழுக்கி
மஞ்சரியுஞ் சின்ன மலர்தூவிச்—செஞ்சுடரின்

---

114. செய்யாள் - திருமகள். நகக்கூர் - நகம் பட்ட கீறல் தழும்புகள். முடை - தீ நாற்றம். திருவேங்கடமுடையானுக்குத் திருமுழுக்குச் செய்தலை, திருமகள் அவன் திருமேனியில் ஊறுபடுவித்த நகக்கீறல் காண விரும்பியோ? அவன் விருப்புற்று அளைந்த வெண்ணெய் தயிர் நெய்யாடலில் உண்டாகிய முடை நாற்றத்தைப் போக்கவோ? நிகழ்ந்ததெனத் தற்குறிப்பேற்றி யுரைத்தார்.

115. ஆகாய கங்கை-ஆகாச கங்கா தீர்த்தத்தின் நீர். அம்பொற் கடார நீர் - திருக்கோயில் உட்பிராகாரத்துள்ள திருமஞ்சனக் கிணற்று நீர் நிறைவித்த பெருங் கடார நீரொடு. நீகாரம் - பனிநீர். கலசம் - செம்புப் பாண்டம்.

116. ஒற்றுடை - நீராடியபின் திருமேனியில் நீர் ஒற்றி நீக்கும் திரு ஆடை. உலகு அலையாதே ஒற்றி எனச் சிறப்பித்தார் - திருவயிற்றினுள்ளும் புறமும் அமைந்த உலகுயிர்களுக்கு நலிவு உண்டாகாதபடி ஒற்றித்த தன்மை காட்டுதற்கு. சிற்றூயர் - சிறு ஆய்ச்சாதியர். தாம்பு - கயிறு. பெற்றூர் - பெற்றெடுத்தோர். கயிறு இறுக்கிய பிணிப்புத் தன்மை பார்த்து என்றபடி.

117 கற்பூரம் - பச்சைக் கற்பூரம் திருவேங்கடமுடையான் திருமேனித் திருமுழுக்கு நாளில் புழுகுத் தயிலத் திருக்காப்புச் செய்யச் சேர்ப்பது வழக்கம். கல்வெட்டுகளில் இது காணப்படுகின்றது. அஞ்சன வெற்பு - அஞ்சனமலை: திருவேங்கடமுடையானுக்குக் குறிப்புப் பெயர்.

118. பச்சைக் கற்பூரத் தேய்வையும், புழுகுத் திருக்காப்பும் முறையே வெண்மை நிறமும், கருமை நிறமும் தோற்றுவித்தலால் வெள்ளி வெற்பு, அஞ்சன வெற்பு என இரு வண்ணமாக உரைத்தார். திருவேங்கடக் கலம்பகம்.

"நலமணி மலைபா ணிலவுபோர்த் தென்ன
வாலிதிற் கருப்புர மேலணிர் தந்த
வியன்மலை கமஞ்சூற் புயல்படிந் தாங்குப்
புழுகொழு கப்புனை யழகிய வடிவோய்"—என

இவ்வாறு உரைப்பதும் காண்க.

மஞ்சரி - பூங்கொத்து. சின்னம் - அடையாளம். செஞ்சுடர் - சிவந்த கதிர்கள்.

119. பன்னிரண்டு சூரியரும் பானுகுலத் தேபிறந்தாற்
கென்னசெயத் தக்கோ மெனவெண்ணிப்—பொன்னின்
120. கிரணவலி தொகுத்த கேண்மையென மின்னத்
தருணருண மகுடஞ் சாத்தி—யிரணியவில்
121. லம்புடனே வந்ததென வம்மவுலிச் சூரியர்கள்
விம்பமெனக் கோறம்ப மேற்கட்டி—யும்ப
122. ருலகளந்த காலத் துடுப்படிந்த தென்னத்
திலகமணி விட்பந் திருத்திக்—கலைகுறைந்த
123. தண்பிறையு மீசன் சடைப்பிறையு நாணவே
வெண்பிறைநா மத்தை விதானித்துப்—பண்புமறை
124. யெத்தோடு மாழ்வா ரிசையிருந்த பண்டாரத்
தத்தோடு முத்தோ டலங்கரித்துச்—சித்ரமதி
125. மண்டலத்தைக் கீறி வருமுபய பானுவெனக்
குண்டலத்தின் காந்திக் கொழுந்தோடக்—கண்ட

---

119. பன்னிரண்டு சூரியர் - மேடம் முதலிய பன்னிரண்டு இராசிகளிற் செல்லும் பன்னிரண்டு சூரியர்கள். பானுகுலத்தோன் - சூரிய குலத்துப் பிறந்த சீராகவன்.

120. கிரணவலி-கதிர் வரிசை. கேண்மை-நட்பு. தருணருணமகுடம்-பக்குவமான சிவந்த பொற் கிரீடம். இரணிய வில் - பொன்னாற் செய்த வில்.

121. மவுலி - மகுடம். விம்பம் - பிம்பம். கோறம்பு - நெற்றி அணியுள் ஒன்று: பெரியாழ்வார் திருமொழி - "நெற்றிமேற் றிருத்திய கோறம்புந் திருக்குழலும்" 3. 4. 6. பார்க்க. உம்பர் - மேல்.

122. உடு - நட்சத்திரங்கள். திலகம் - பொட்டு. கலை - ஒளி. ஈசன் சடைப்பிறை - சிவன் சடையில் ஒரு கலைப்பிறை. முன் சுட்டியது வானில் உள்ள முந்நாட் பிறை எனக் கொள்க.

123. வெள்ளிய பிறைவடிவுள்ள திருநாமத்தை (ஊர்த்துவ புண்டரம்) விதானித்து - மேல் இட்டு. மறை - வேதம்.

124. எத்து - போற்று (எத்து). ஆழ்வார் இசை - நம்மாழ்வாரின் திருவாய்மொழிப்பண். பண்டாரம் - சரக்கறை. ஈண்டுத் திருவேங்கடமுடையான் திருச்செவிகள். "ஆழ்வார்கள் செந்தமிழை யாதரித்த வேங்கடம்" எனத் திவ்யகவி பிள்ளைப் பெருமாள் ஐயங்கார் அருளியதும் காண்க. அத்தோடு முத்தோடு - தோட்டினை முத்துக்களோடு.

125. மதி மண்டலத்தைக் கீறி வரும் உபயபானு - சந்திர மண்டலத்தைப் பிளந்து வெளிப்படும் இரு சூரியர்கள். இங்குத் திருமுக மண்டலத்தில் திருச்செவியில் இலகும் இரு குண்டலங்களுக்கு அபூத உவமை. காந்திக் கொழுந்து - ஒளியின் கதிர்கள். கண்டம் - கழுத்து. உலகு மூன்று - மேல் கீழ் நடு உலகங்கள்.

126. மொருந்தானே மூன்றுலகு முண்பதற்குக் காட்டும்
விருதாந் திருச்சரத்தை வீக்கி—யருணவெயில்

127. சேகுபுரி குண்டல்மாஞ் செங்கதிரை வெற்பிலும்பாய்
போகியென வாகு புரிகாந்த—மார்கும்ப

128. வெங்கதமா தங்க விடங்கமணிக் கிம்புரிபோ
லங்கதமா தங்க வணிபொங்கத்—தங்களிலே

129. நங்கணங்க ளூதனென்று நாகரெலா மீன்றமணிக்
கங்கணங்க ணின்று கதிர்வீசச்—சங்கநிலாச்

130. சக்கரத்தின் வெய்யிற் சமராடு மார்பிலே
புக்கிருந்தா ளூசல் புகுந்தாட—மிக்கநறைத் (130)

131. தண்டுழாய் மாலை தழுவுநீ லக்கோவை
வண்டுழா நின்று வனப்பெய்த—வண்டங்க

132. ளுள்ளிருந்த விம்பமென வொண்மழைக்குள் ளாலியெனத்
தெள்ளியமுத் தாரத் திரளொருங்க—வள்ளற்

---

126. விருது - வெற்றிக் குறி. திருச்சரம் - கண்டசரம் என்னும் பொற்பணி. வீக்கி - கட்டி. அருணம் - சிவப்பு.

127. சேகு - திண்மை. குண்டலமாஞ் செங்கதிர் - சூரியன்: உருவகம், வெற்பு - மலை. போகி - பாம்பு. இங்குச் சூரியனைப் பற்ற வரும் இராகு ஆகிய பாம்பு. வாகுபுரி - தோள்வளை என்ற அணி. காந்த - விளங்க.

128. வெங்கதம் - கொடுஞ்சினம். மாதங்கம் - யானை. விடங்க மணி - உளியாற் செதுக்குறாத முத்து மணி. கிம்புரி - கொம்புப்பூண். அங்கதம் - தோள்வளை. மாதங்க அணி - சிறந்த பொற்பணி. பொங்க - பொலிய.

129. நங்கள் நங்கள் நாதன் என்று. நாகர் - நாக வமிசங்கள். மணிக் கங்கணம் - இரத்தினக் கைக் காப்புகள். கதிர் - ஒளி.

130. சங்க நிலா - திருச்சங்கப் படையின் குளிர் ஒளி. சக்கரத்தின் வெய்யில் - திருச்சக்கரப் படையின் வெவ்விய ஒளி. இவ் வேறுபட்ட ஒளி தம்மிற் பொருதல் செய்யும் மார்பம் என்றார், வலப்பாலும் இடப்பாலும் இவை யிருந்து ஒளி செய்தலின். புக்கிருந்தாள் - திருமகள். திருவேங்கடமுடையான் திருமார்பில் வாழும் திருமகள் தனிப்பாவை வடிவாய் அமர்ந்து ஆடுதலின் இவ்வாறு வெய்யில் நிலவுகளில் ஊசல் ஆடுதலாகச் சிறப்பித்தார். நறை - தேன்.

131. குளிர்ந்த துளசி மாலை, நீல மணிவடம், இவற்றில் வண்டுகள் உழுதலைச் செய்தலின் அழகு உண்டாக. அண்டங்கள் - உலகங்கள்.

132. விம்பம் - வடிவம். ஆலி - ஆலங்கட்டி. திருமேனி முத்தாரங்கள் திருவயிற்றுள் உள்ள அண்டங்களின் வடிவம் போலவும், கரிய மேகத்துள் ஆலங்கட்டிகள் போலவும் தோற்றம் தரும் சிறப்பினைக் கூறியது. அள்ளல் - சேறு.

133. கருங்கடலின் பத்திக் கனகநவ ரத்நத்
தரங்கமெனப் பல்பதக்கஞ் சாத்தி—யருங்கலச

134. வட்டமுலை தாங்குதிரு வந்திருக்க மார்பிலே
யிட்டமணிப் பீட மெனவிளங்கச்—சிட்ட

135. ரிலக்கணத்தி லேந்துமறு விந்திரைதன் கொங்கை
மலைக்கணியுங் கத்தூரி மானக்—குலைத்துளவும் (135)

136. பொற்பூண னூலும் புரிநூலு மேகத்துள்
விற்போல் விழிக்கு விருந்தோம்ப—நற்பணிலப்

137. பாலடையின் பாலுதரப் பல்லுயிர்க்கும் பாய்வதுபோன்
மேலிடையே காச மிளிர்ந்தசைய—நூலின்

138. புடைத்தெழுந்த வுந்திமடுப் பொற்றா மரையிற்
சுடர்க்கொடிபோற் பொன்னரைஞாண் சுற்றி—யடுக்குலகை

139. யொட்டியொட் டானிடையி லொட்டியா ணத்தரைநூல்
பட்டிகையாற் கட்டிப் பரிசித்துக்—கிட்டவே

---

133. பத்தி - வரிசை. கனகம் - பொன். நவரத்தினங்களை வீசி விளங்கும் அலைகளைப் போலப் பல மணிப்பதக்கங்கள் அணிந்து. கலசம் - கும்பம்.

134. மணிப்பீடம் - நீலமணி யாசனம். சிட்டர் - சாமுத்திரிகர்.

135. மறு - ஸ்ரீவத்ஸம். இந்திரை - திருமகள். களப கத்தூரி கருநிறத்ததாதலின் திருமார்பின் மறு அதனை ஒப்ப என்றார். மான - ஒப்ப. குலத்துளவு - சிறந்த துளசி.

136. துளவு, பொன்னூல், புரிநூல் ஆகிய இம் மூன்றும் மேகத்துள் தோன்றும் பன்னிற வானவில் போலக் கண்ணுக்குப் புதுக்காட்சி அளிக்க.

137. பணிலம் - சங்கு. சங்கம் ஆகிய பாலடையில் உள்ள பால் தன் திருவயிற்றுள்ளிருக்கும் பல வுயிர்களுக்கும் பாய்வது போல மேலாடை யாகிய உத்தரியம் விளங்க என்றார். ஏகாசம் - மேலாடை.

138. பொன்னரைஞாண் - இடுப்பிற் கட்டும் பொற் கயிறு. இது திருவுந்தி யாகிய மடுவில் பூத்த தாமரையின் ஒளிக்கொடிபோற் தோற்றம் செய்யும் வண்ணம் கூறினர்.

139. நாராயணன் விசுவ சரீரியாயினும் ஒட்டி யொட்டாதுள்ள நிலைமையைக் கூறி அன்னான் இடுப்பில் ஒட்டியாணம், அரைப்பட்டிகை ஆகிய அணிகலன்கள் அணிவித்தமை காட்டினர்.

140. கச்சிறுக்கிச் சீராவுங் கட்டிக் கருதார்தங்
கைச்சிறுக்கி மார்நாசி கம்பிக்கத்—தைச்சவிழிப்

141. போதாள் சருவுமெனப் பூவிருந்த பொற்றுடையைப்
பீதாம் பரத்தாற் புறம்பேணிப்—பூதலத்தி

142. லெங்களுக்கு மெம்மை யெழுதினா ரைப்படைத்தார்
தங்களுக்கு மூதாதை தாளிலே—மங்கலப்பொற்

143. செஞ்சதங்கை பூட்டியிளஞ் சேயாக்கித் தேவரெல்லாந்
தஞ்சதங்கை கூப்பிச் சரணென்ன—மஞ்சரிக

144. வெண்டையமுந் தண்டைகளு மின்னோடை முன்னோடிச்
சண்டையிடு மாபோற் சலசலெனப்—பண்டித்

145. தரையளந்த சேவடியைத் தானளந்தோ மென்று
திருவடியி ணங்கித் திகழத்—துருவியொளி

146. சன்னபின்ன லாகத் ததைந்தபரஞ் சோதியுரு
வின்னதென வைய மிசைவிக்கக்—கன்னிமலர்

147. சந்திரநீ லோற்பலங்கள் சாத்துகைக்கு ளோர்பலத்தை
யிந்திரன்கா ணிக்கை யெனவீய்ந்து—வந்தவுணர்

---

140. கச்சு - அரையிற் கட்டும் கச்சை. சீரா - கவசம். கருதார் - பகைவர். தங்கை - தங்கையர். சிறுக்கிமார் - இளம் பெண்டிர்.

141. போதாள் - பூவிருந்தவள். சருவும் - கொஞ்சிக் குலாவும். பூம் தேவி அமர்ந்த அழகிய தொடைகளை. பீதாம்பரம் - பொன்னுடை. புறம் பேணி - வெளி மறையப் போர்த்து.

142. எம்மை எழுதினர் - பிறப்புக் கணக்கில் இட்டவர். மூதாதை - முன்னோன்.

143. சதங்கை பூட்டுதலால் சிறு குழவியாகக் கருதி. தஞ்சம் - எளிமை. சரண் - புகல். மஞ்சரிகம் - பூ வேலைப்பாடு : முத்தும் ஆம்.

144. வெண்டையம் - வீரர் காலணி. ஒளி ஓடுமாறு முன்னாக ஓடி - பிராசம் காண்க.

145. பண்டு உலகை அளந்த சேவடியைத் தண்டை, வெண்டையம் தாம் சுற்றுதல் உற்று அளந்தன என்று தற்குறிப்புச் செய்தார்.

146. சன்ன பின்னல் - சிக்கல். ததைந்த - நெருங்கிய.

147. சந்திரன் மலர்த்தும் நீல மலர்கள். பலம் - பழம். இந்திரன் பெய்யும் காணிக்கைப் பொருள் எனக் கொடுத்து. அவுணர் - இராக்கதர்.

148. சாராம லோதித் தரைகிள்ளிப் பூவைமார்
நீராஞ் சனமெடுத்து நின்றேத்தி—யாரேனு

149. மெண்ணாது தன்னுள்ளே யெப்பொருளுங் காட்டிறைக்குக்
கண்ணாடி காட்டியிணை காட்டியே—யண்ணல்வழி

150. வாராம லின்றைமட்டு மன்னியெனத் தென்மங்கை
யூரானை முன்னே யுடன்படுத்தி—யாரணத்தான் (150)

151. மங்கலகீ தத்துதியால் வைகா னசவிதியா
லங்கரங்க வைபோகத் தர்ச்சித்துப்—பைங்கறியோ

152. டாறு சுவையுணவி ராயிரகோ டித்தளிகை
நூறு முகமாய் நுகர்ந்தருளி—வீறெல்லா

153. மேவியடைக் காயமுதும் வெள்வெற் றிலையமுதுந்
தேவியரோ டேயயின்று சீராடிப்—பூவைமீ

154. ரண்ட ருடன்கோயி லாலயங்கள் பொன்வெள்ளி
மண்டபங்க ளாயிரக்கால் மண்டபங்கள்—தொண்டர்செயும்

155. பல்சிறப்பு மண்டபங்கள் பார்ப்போம் பவனிக்கு
வல்விரைந்து பல்லக்கில் வாருமெனக்—செல்வரிசை (155)

---

148. தரையை நகத்தாற் கிள்ளிக் காப்பிடுதல் மகளிர் வழக்கு. பூவைமார் - இள மகளிர். நீராஞ்சனம் - நீராத்தி.

149. இறைக்கு - இறைவனான நாராயணனுக்கு. தன்னுள்ளே யெல்லாப் பொருள்களையும் காட்டும் இறைவனுக்கு அவன் திருவுருவைக் கண்ணாடிக்குள் காட்டி வடிவொப்பினைத் தோற்றுவித் தென்று சிறப்பித்தார்.

150. மன்னி - நின்றேன். தென் மங்கையூரான் - திருமங்கை யாழ்வார். இவ்வாழ்வார் முன்பு திருமால் நெறி தழுவாது நின்று பின்னர் அப்பெருமான் திருமந்திரம் பெற்று அடிமை பூண்ட வரலாறு தேர்க.

151. ஆரணம் - வேதம். மங்கல கீதத்துதி - சுப சங்கீத தோத்திரம். வைகானசம் - ஸ்ரீ நாராயணன் விகனஸ மகருஷிக்கு அருளிச் செய்துணர்த்திய ஸ்ரீவைணவாகமமாம். அங்கரங்க வைபோகம் - எல்லாச் சிறப்பும் குறைவின்றி யுடைய. பைங்கறி - பசிய மிளகு.

152. ஆறுசுவை - கார்ப்பு, கைப்பு, உவர்ப்பு, துவர்ப்பு, இனிப்பு, புளிப்பு. தளிகை - சமைத்த சோறு.

153 அடைக்காய் - பாக்கு. பாக்கு வெற்றிலை யிரண்டும் அமுதெனப் படுதல் வழக்கு. அயின்று - தின்று.

154. அண்டர் - தேவர்.

155. பவனி - உலா. வல்விரைந்து - மிக விரைவாக.

156. பூரி சொரிந்து புராணமறை யோர்வாழ்த்த
வீரமணிக் கேடகத்தின் மீதேறி—வாரியென

157. வொற்றை முழங்க வுபநிடங்க ளார்ப்பெடுப்பச்
சுற்று மலர்சொரியத் தோன்றியே—வெற்றிநிறை

158. செண்பக வாசலிலே தென்றலுலா முன்றிலிலே
பண்பலிபீ டத்தின் பரப்பிலே—தண்பனிநீர்

159. வீச வுலாவி விளங்குமணி வைகுந்த
வாசலெழிற் கோபுரமுன் வந்தெய்தித்—தேசுபொழி

160. வச்சிரத் தட்டு வயிடூரி யப்பலகை
பச்சை யிருசு பவழக்கா—லச்சுப் (160)

161. பதுமரா கக்கொடிஞ்சிற் பன்னகமா ணிக்கங்
குதிகொளா ணிக்கனக கும்பங்—கதிரிலகுங்

162. கோமே தகமகுடங் கோலமெலாம் பொற்கலிங்க
மாமேரு வொத்த மணித்தேரிற்—றுமே

163. திருமார் பிரியாத தேவி யுடனேறி
யிருதேவி யார்க்கொருதே ரீய்ந்து—முரசதிரப்

---

156. பூரி - பரிசுப் பொருள். புராண மறையோர் - புராண வேதம் அறிந்த பிராம்மணர். மணிக்கேடகம் - வயிரப் பலகை. வாரி - கடல்.

157. ஒற்றை - ஊதுகருவி. உபநிடங்கள் - வேதாந்தங்கள். ஆர்ப்பு - பேரொலி.

158. செண்பக வாசல் - இப்போது இது சம்பங்கிப் பிரதக்ஷிணத் திருவாயில் எனத் திரிந்து வழங்குகின்றது. தென்றல் - மந்தமாருதம். முன்றில் - முற்றம்.

159. வைகுந்த வாசல் - திருவேங்கட முடையான் கருப்பக் கிருகத்தின் உட்சுற்று வாசல். தேசு - ஒளி.

160. தட்டு, பலகை, இருசு, ஆர்க்கால், அச்சு, கொடிஞ்சு, கும்பம், மகுடம், கோலம் முதலிய தேருறுப்புகள் - வயிரம், வயிடூரியம், மாகதம், பவளம், பதுமராகம், மாணிக்கம், ஆணிப்பொன், கோமேதகம், பொன்னுடை முதலியவற்றால் அமைந்ததென வருணித்தமை காண்க.

162. கோலம் - தேர்ச்சுற்றுத் தொங்கல் ஆடை. பொற்கலிங்கம் - பொன்னுடை.

163. ஸ்ரீநிவாசப் பெருமாள் ஒருதேரூர்ந்தும், பூப்பிராட்டியார், பின்னைப் பிராட்டியார் இருவரும் ஒருங்கு மற்றொரு தேரூர்ந்தும் போந்த பழஞ் செய்தி இந்நூலால் அறியப்படுவது.

164. பேரி முழங்கப் பிளந்ததய னண்டமெனத்
தூரியங்கள் கோடி துவைத்தார்ப்பக்—காளவி

165. லிந்திர வட்டத் தெகினம் பறந்ததெனச்
சந்திர வட்டந் தலைதந்தாடப்—பந்தரிடுஞ் (165)

166. சேருடிப் பிச்சஞ் செழுங்குடைக ளண்டத்தி
ஞருடி யப்பா லசைந்தாட— மாருடி

167. மெத்துதவ ளக்குடைக்கீழ் வெண்சா மரைக்கற்றை
சுற்றுநிலாக் கூற்றை சொரிவதெனவெத்திசையுங்

168. கட்டியத்தர் வேத்திரத்தர் காளாஞ் சியாடைப்பைப்
பெட்டகத்த ரெங்கும் பிறங்கியிட—மட்டுமலர்ச்

169. சேனைத் தலைவர் திருப்பிரம்பு தேவர்பெருந்
தானைத் தலைவர் தமைச்சாட—ஞானத்

170. திருவடியார் தம்முடனே செம்மலரிற் பிள்ளை
யருமறையா லாசி யறையத்—தருவனத்து (170)

---

164. முரசு அதிரவும், பேரிகை முழங்கவும். பிரமாண்டம் பிளந்து விட்ட தென்னும்படி. தூரியங்கள் - வாத்தியங்கள். துவைத்தார்ப்ப - மிகுந்து ஒலிசெய்ய.

165. எகினம் - அன்னப்பறவைகள். பறந்த படியாகச் சந்திரவட்டக் குடைகள் நெருங்கி அசைய.

166. சேருடி - ஒருவகை விருது. பிச்சம் - பீலிக்குஞ்சக் குடை. அண்டத்தின் ஆறு ஆடி - ஆகாச கங்கையில் முழுகி.

167. தவளக் குடை - வெண்முத்தக் குடை. வெண்சாமரைக் கற்றை - வெண்மையாகிய கவரிமான் வால் மயிர்க்கற்றைச் சின்னம்.

168. கட்டியத்தர் - கட்டியம் கூறுவோர். கட்டியம் - மன்னன்முன் பாடும் புகழ்ப்பா. வேத்திரத்தர் - கைப்பிரம்புக் காவலர். வேத்திரம் - பிரம்புக் கோல். காளாஞ்சியர் - தம்பலந் துப்ப ஏந்தும் கலசக்காரர். அடைப்பைப் பெட்டகத்தர் - வெற்றிலை பாக்குப் பேழைக்காரர். பிறங்கியிட - விளங்கி நிற்க.

169. சேனைத் தலைவர் - சேனை முதலியார் என்னும் விசுவக்சேனர். இவரே திருப்பிரம்புதேவர்: பரமபதத்தில் பெருமாள் சந்நிதியில் காலம் பார்த்து உள்ளே விடுபவர்.

170. செம்மலரிற் பிள்ளை - திருமாலின் திருக்கொப்பூழின் மலர்ந்த செந்தாமரையில் வீற்றிருக்கும் பிரமதேவன். மறையா லாசியறைய - வேத மங்கல சுலோகங்கள் கூற. தருவனம் - தேவருலகத்துக் கற்பகம் முதலிய பஞ்சதருக்கள் உள்ள வனம்.

171. வாசமலர்மழைபோல் வானவர்கோ மான்சொரிய
வீசெரி காள விருதோதப்—பாசதரன்

172. பொற்றண்ட ரோடே புகுந்து திரள்விலக்கப்
பற்றி நிருதி பலிபோற்றச்—சுற்றும்

173. வருணன் பனிநீர் வழங்கி வரவாயு
விரவொளியா லாலவட்டம் வீசப்—பொருள்சுமப்போன்

174 போலவள கேசன் பொன்கொழிப்ப வீசானன்
கோல நடனருடன் கூத்தாடச்—சீலமுடன்

175. செங்கதிருக் வெண்கதிருஞ் சேரவே பக்கமதிற்
செங்குடையாய் வெண்குடையாய்ச் சேவிப்பப்—புங்கவருஞ் (175)

176. சோகமறு நித்திய சூரியரு மீரேழு
பாக வதரும் பணிந்தேத்த—வாகைப்

---

171. இந்திரன் பஞ்ச தருக்களின் மணமலர்களை மழைபோற் கொட்ட. எரி - அக்கினிதேவன். காளவிருது - எக்காளம் என்ற சின்னம். பாசதரன் - பாசக் கயிற்றைக் கையில் உடைய யமன்.

172. பொன்னாற் செய்த தண்டத்தைத் தாங்கிய ஏவலரோடு புகுந்து. நிருதி - தென்மேற்குத் திக்குபாலன். பலிபோற்ற - பூசைப் பொருளைப் போற்ற.

173. வருணதேவன் பனிநீர் வீசிவர, வாயுதேவன் பேராலவட்ட விசிறி கொண்டு வீசி நிற்க.

174. அளகேசன் - அளகாபுரித் தலைவன் ஆகிய குபேரன். ஈசானன் - சிவன். நடனர் - சபாநர்த்தகர். 340-ம் கண்ணி முதல் இதுவரை முறையே கீழ்த்திசை, தென்கீழ்த்திசை, தென்திசை, தென்மேற்றிசை, மேற்றிசை, வடமேற்றிசை, வடதிசை, வடகீழ்த்திசை ஆகிய எண்டிசைப் பாலகர்கள் ஆகிய இந்திரன், அக்கினி, இயமன், நிருதி, வருணன், வாயு, குபேரன், ஈசானன் இவ்வெண்மர்களின் சேவைத்திறனை முறையாற் கூறிய அழகு நோக்கத் தக்கது.

175. வெண்கதிர் - சூரியன். தண்கதிர் - சந்திரன். இவ்விருவரும் முறையே செங்குடை, வெண்குடைகள் ஆக அமைந்தனர். புங்கவர் - இருடியர்.

176. சோகம் - உலகத்துயர். நித்திய சூரியர் - நித்திய விபூதி யாகிய பரமபதத்தில் பெருமாளுக்கு அணுக்கராய் உள்ள அநந்த கருடர் முதலியோர். ஈரேழு பாகவதர் - பிரகலாதர், நாரதர், ஸநகர், ஸநந்தனர் முதலிய பதினான்கு பாகவத தாஸபூதர்கள்.

"இரணியன் சிறுவன் சுரர்முனி சமதக் கினியசே யெழில்கொள்புண் டரீக
ரருமறை பகர்ந்தோ னுயருமம் பரீட னருள்செறி சுகன்சவு னகன்றூன்
வரநதி புதல்வன் ருப்பிய னுருக்கு மாங்கதன் றனஞ்செயன் வசிட்டன்
பரவைசூ ழிலங்கை வீடணன் முதலாம் பரமபா கவதரும் வாழி"

என்று மகா பாகவத புராணம் கூறுவதும் காண்க. வாகை - வெற்றி.

177. பெரியாழ்வார் பொய்கையார் பேயார்பூ தத்தார்
பரியாற் பரமபதம் பாய்ந்தார்—விரிமறையோ

178. ராயிரமாய்ச் செய்தா ரணிமழிசை யாரரங்கர்
கோயிலெல்லாங் கண்டுபதங் கூடினர்—தூயசெழும்

179. பத்த ரடிப்பொடியார் பாணனர் தென்குருகூ
ரத்தரையே பாடி யருள்பெற்றார்—முத்தி

180. யெதிராச ராச ரெதிரே கருணை
முதிரா நயனநீர் மூழ்க—விதிவழியாய்த்

181. தேடித் திரியுந் திருமுடியி லேயொருத்தி
சூடிக் கொடுத்த தொடைவீசச்—சேடகிரி

177. பரியாற் பரமபதம் பாய்ந்தார் - திருமங்கை யாழ்வார். இவர் 'ஆடன்மா' என்ற தமது குதிரைமீது ஏறி வழிப்பறி செய்து பெருமாள் ஆராதனை நடத்தியமை பற்றி இப் பாராட்டுப் பெற்றார்.

178. விரிமறை யோராயிரமாய்ச் செய்தார் - சாமவேத சாரமாய்த் திருவாய்மொழியை அருளிய நம்மாழ்வார். அரங்கர் கோயில் - திருவரங்கம் பெரிய கோவில். எல்லாம் - பிற வைணவத் திருப்பதிகள். இவ்வனைத்தும் கண்டு பாடிப் பதம் அடைந்தவர் குலசேகராழ்வார்.

179. பத்தரடிப் பொடியார் - தொண்டரடிப் பொடியாழ்வார். பாணனர் - திருப்பாணழ்வார். தென் குருகூர் அத்தர் - தென்னாட்டிலுள்ள திருக்குருகூரிற் றேன்றிய நம்மாழ்வார். அவரையே பாடி யருள் பெற்றார் மதுர கவி யாழ்வார். "தேவுமற்றறி யேன்குருகூர் நம்பி, பாவி னின்னிசை பாடித் திரிவனே" என்று நாரணனைப் பாடாது நம்மாழ்வாரைப் பாடிப் பேறு பெற்ற பெரியார்.

180 எதிராச ராசர் - ஸ்ரீ ராமானுசமுனிவர். நயனம் - கண். 354-ம் வரி முதலாகப் பெரியாழ்வார் முதலாகப் பதினொரு ஆழ்வார்களையும் ஆசாரியருள் தலைமை பெற்ற இராமாநுசரையும் கூறி இவர்கள் திருவேங்கடமுடையான் முன்பு ஆனந்தக்கண்ணீர் மூழ்க நின்றனர் என்றமையால் இவர்கள் திருப்படிவங்கள் அக்காலத்து உலா நாளில் எழுந்தருளிய செய்தி புலப்படுகின்றது. கல்வெட்டுகளில் ஆழ்வார்கள் இராமாநுஜர் வழிபாடு காணப்படுகின்றது.

181. ஒருத்தி சூடிக் கொடுத்த தொடை - ஆண்டாள் அணிந்து அளித்த மாலை: ஸ்ரீவில்லிபுத்தூர்ச் செல்வியார் ஆகிய ஆண்டாள் "வேங்கடவற் கென்னை விதிக்கிற்றியே" என்று வேண்டிக் கொண்டமை ஈண்டு நோக்கற் குரியது. சேடகிரி - சேஷமலை.

182. ய்ச்சுதனுர் செங்கோலு மப்பன் கருவுல
லச்சினையு மேந்தி யிருபோதும்—நிச்சயமாய்

183. வாகாய தெய்வீக வைபோக பாரகராய்ச்
சீகாரி யஞ்செய்வோர் சேவிக்க—நாககிரி

184. மாற்குந் திருப்பதிக்கு மண்டபத்தின் முன்வரிசை
யேற்கு மெழுவத் திருவோரும்—நாற்கரனை

185. யேத்தெட்டு வாணற் கிணையாகி யச்சுதனுர்
நூற்றெட்டு வர்க்கத்து நூலோருஞ்—சீர்க்கருணை (185)

186. மாறும லர்ச்சனைசெய் வைகா னசசரிதை
யாறு தனத்தோ ரனைவோரும்—பேறுன

187. கேள்விப் பெருமுக்கோல் கேசவன்செங் கோல்கோலி
வாழ்வித் திடுமுபய மாதவரும்—வேள்விச்

---

182. அச்சுதனுர் - அடியாரை நழுவ விடாத பெருமானுர். அப்பன் - மலையப்பன் என்ற திருப்பெயருடைய பெருமான். கருவூலலச்சினை - பொக்கிஷ சாலை அடையாளக் குறி.

183. வாகு - ஒழுங்கு. வைபோகம் - சீர்மை. பாரகர் - தாங்குவோர். சீகாரியம் - தேவஸ்தான பரிபாலனம். இச்சொல் கல்வெட்டுகளில் பெரிதும் பயிலும் "ராஜ ராஜீசுவரம் உடையார் கோயில் சீகாரியஞ் செய்வான். (S. I. I. II. 311) நாககிரி - சேஷகிரி.

184. திருமலை, திருப்பதி இவ்விரு கோயின் மண்டபத்தின் பெருமாள் தீர்த்தப் பிரசாதம் பெறும் வரிசைச் சிறப்புடையார் எழுபத்திருவர்கள். நாற்கரனை - நான்கு திருக்கைகள் உடையான் ஆகிய திருமாலை.

185. வாணன் - வாணுசுரன். இணை - ஒப்பு. அச்சுதனுர் - ஸ்ரீமந் நாராயணன் அருளிச்செய்த பாஞ்சராத்திர சம்மிதைகள் நூற்றெட்டு என் பாராதலின் அவற்றின் சார்பினராகிய ஸ்ரீ வைணவர்கள் என்க. யேத்தெட்டு- பாடம் பிழை. "யேற்றிட்ட" என்று பாட மிருத்தல் வேண்டும்.

186. வைகானச சரிதை - ஸ்ரீமந் நாராயணனுல் தம்மை ஆராதிக்க விதி பெற்ற விகனச மகருஷியின் வழியினர். இவர் யஜுர்வேத பாகமான வைகானஸ ஸூத்திரப்படி ஸ்ரீமந் நாராயணனை ஆராதிப்பவர்கள். ஆறு - நெறி. கொத்து - கூட்டம்.

187. கேள்வி - சுருதி. பெருமுக்கோல் - திரிதண்டம். ஸ்ரீ வைஷ்ணவ சந்நியாச மேற்கொண்ட பெரியார் தம் திருக்கையில் தாங்குவது. கேசவன் - ஸ்ரீமந் நாராயணன். செங்கோல் - சமய ஆட்சி. உபயமாதவர் - பெரியசீயர், சின்னசீயர் என இரண்டு பெரியார்கள் திருமலையினும், திருப்பதியினும் எழுந்தருளி ஸ்ரீ வைஷ்ணவ சமய பரிபாலனம் புரிந்தோர். வேள்வி - யாகம்.

188. சுருபற் கலர்மாரி தூவியவே காங்கி
யிருபத்து நால்வ ரினமும்—பரிவுற்றுச்

189. சங்காழி யொற்றியெமைத் தாங்குமெழு பத்துநாற்
சிங்கா தனத்திருந்த தேசிகரு—மிங்காரு

190. நய்வீன நால்வேத நாதமுனி கோத்திரத்துத்
தெய்வீக விண்ணப்பஞ் செய்வாரு—மெய்வீதித் (190)

191. தோணிக்குந் தெய்வத் திருப்பதிக்கு மாதியாம்
பேரெழிற்புல் லாணிப் பெருமானும்—பர்ரறிய

---

188. சுருபன் - சொரூபன் : வடிவானவன். நாராயணன் யக்ஞபதியாவது அறிக. அலர்மாரி ஏகாங்கி - திருப்பூ அர்ச்சனைப் பணிபுரியும் தனி வாழ்க்கைத் துறவியர்கள். பரிவு - அன்பு.

189. சங்காழி யொற்றுதல் - திருச்சங்க சக்கரக் குறிகளை ஸ்ரீ வைஷ்ணவ தாஸர்கட்குத் தோளில் ஒற்றிச் சமயச்சார்பு சேர்ப்பித்தல். இது ஸ்ரீ வைணவ சமயத்துப் பஞ்ச சம்ஸ்காரங்களுள் "தப்த முத்திரா தானம்" எனப்படும். எழுபத்துநாற் சிங்காதன தேசிகர் - இவர்கள் ஸ்ரீ வைஷ்ணவ சமயப் பிரவர்த்தகாசாரியர் ஆகிய ஸ்ரீ ராமாநுஜ யதீந்திரரால் எழுபத்து நான்கு பீடங்களில் சமயத் தலைவர்களாக நிறுவப் பெற்ற பெரியார்கள். திருவேங்கடக் கலம்பகம் கூறுவது காண்க :—

"மங்காத கீர்த்தி யெதிராசர் பாத மணிமுடியாத்
தங்காத லாற்றந் தலைச்சூடிக் கொண்டு தடங்கடல்சூழ்
அங்கா சினியைப் புரக்குமெட் டெட்டுட னையிரண்டாஞ்
சிங்கா தனக்குரு ராயர்தம் பேர்சொலிற் றீதறுமே."

190. நைவீன நால்வேதம் - நம்மாழ்வார் அருளிச்செய்த திருவிருத்தம், திருவாசிரியம், பெரிய திருவந்தாதி, திருவாய்மொழி ஆகிய நான்கு திராவிடத் திருமறைகள். நவீனம் - நைவீனம் என எதுகை நோக்கி நின்றது. ஆசாரிய நாதமுனிகளுடைய சடமர்ஷண கோத்திரத்தினர் அக் காலத்துச் சீரங்கத்துப் பெரிய கோயிலிற்போலத் திருமலைத் திருவேங்கடமுடையான் சன்னிதியினும் விண்ணப்பக் கார்யம் செய்வார்களா யிருந்தமை அறிக. இவர்கள் ஸ்ரீசைல விஞ்ஞப்தி கார்யர் எனப்பட்டனர்.

191. திருப்புல்லாணி தாஸர் என்ற பெரியார் ஒருவர் வீரநரசிம்ம யாதவராயர் இராச்சியபாரம் மேற்கொண்ட நாளில் திருமலையில் திருப்பணி பல செய்தனர் எனத் திருமலைக் கல்வெட்டுகள் தெரிவிக்கின்றன.

192. வஞ்சனவெற் பாளற் ககலாம லூழியஞ்செய்
மஞ்சனகா லத்திரா மானுசனுஞ்—கஞ்சனெனச்

193. செங்கையெழுத் தாணித் திருவாண் டெழுத்தெழுது
மெங்க டிருநிறையா ரெல்லாருந்—திங்கள்வழிச்

194. செற்கோல மேனியனார் செண்பகவா சற்காக்கும்
பொற்கோயில் கைக்கோளப் புண்ணியரு—மற்காலஞ்

195. சீராட்டி யாட்டித் திருவந்திக் காப்பெடுத்துத்
தாராட்டி நாவோர் தமிழ்காட்டிப்—பாராட்டி (195)

196. வாளம் படைத்து வசிகரித்து மன்மதனை
யாளெம் பெருமா னடியாரு—நாளுமவர்

---

192. அஞ்சன வெற்பு-அஞ்சனாசலம் என்பது ஏழுமலைகளுள் ஒன்றன் பெயர். ஊழியம் - தொண்டு. மஞ்சன காலத்து இராமானுசர் - திருவேங்கட முடையான் திருமஞ்சனத்துக் குரிய கைங்கர்யங்க ளாகிய மேதித்த சாத்துபடிச் சந்தனம், மஞ்சள்காப்பு, நெல்லிக்காப்பு, கஸ்தூரிக் காப்பு, கற்பூரக்காப்பு முதலியவற்றை நியமித்து நடத்தி வந்த பெரியார் ஆகிய கந்தாடை இராமானுஜய்யங்கார். இவர் கைங்கர்யம் சகாண்டு 1386-ம் ஆண்டு தொடங்கி நடை பெற்றதாகக் கல்வெட்டுகள் காட்டுகின்றன. இவர் அக்காலத்து ஸ்ரீராமானுஜ யதீந்திரர் ஆசாரிய சந்தானத்தில் அழகிய மணவாள ஜீயரின் சிஷ்யரெனத் தெரிகின்றது. கஞ்சன் - பிரமன்.

193. எழுத்தாணியினால் கோயிற் பணிக்குரிய ஆண்டுக் கணக்குகள் எல்லாம் ஓலையில் எழுதித் தொகுக்கும் பணியாளர் ஆகிய ஸ்ரீ வைணவப் பெருமக்களைச் சுட்டுகின்றார். திங்கள் வழி - சந்திர வமிசம். கண்ணன் யாதவ வமிசியாதலால் சந்திர குலத்தன். கல்வெட்டுகளில் 'திருவாண்டெழுத்தெழுத்திடும்போது' 'திருவாண்டெழுத்துச் சாத்தியருளும்போது' என்று வரும் தொடர்களால் இவ்வழக்கு அறியப்படும்: இது ஆதி அயனம் எனப்படுகின்றது.

194. செல் - மேகம். கோலம் - அழகு. மேகம் போன்ற அழகிய திருமேனியான் ஆகிய திருவேங்கடவனார். செண்பக வாசல் - இப்போது சம்பங்கித் திருவாசல் எனப்படும். இவ்வாயில் காவல் அக்காலத்துக் கைக்கோளருக்கு அமைந்திருந்த செய்தி சாளுவ அரசர் காலத்துக் கல்வெட்டுகளில் "திருஅகம் படித்தொண்டுக் கைக்கோளற்கு" என வரும் குறிப்புகளால் அறியப்படுகின்றது. அற்காலம் - இராக் காலம்.

195. அந்திக்காப்பு - மாலைக்காலத்துச் சிறப்பு. நாவோர் தமிழ் - தமிழ் நாவலர்கள் ஆகிய ஆழ்வார்களின் பிரபந்தங்கள்.

196. வாளம் - வாள் படை. வசிகரித்து - வசம் செய்து. மன்மதனை யாளும் எம்பெருமா னடியார் - தேவரடியார்கள்.

197. மன்ற லளக மணங்கூர் மகரந்தத்
தென்றலிலே யேறிவருஞ் சித்தசனு—நின்றநிலைப்

198. பத்துடனே நாலாய்ப் படைத்தபுவ னப்பள்ளிக்
கொத்தடியா ராருங் குழாங்கொள்ளச்—சத்துருவாங்

199. கோதமனை யிந்திரனுர் கொண்டாட நாலுமுக
வேதன் திலோத்தமையை மெச்சியிட—வோதக்

200. கடலேந் துலகமெலாங் காத்தபிரான் வந்தான்
வடவேங் கடத்தரசு வந்தான்—[ஞுடர்கதியைக் (200)

201. கைமா வினுக்குமொரு கால்மா வென்றருள்சே
வைமா தவப்பெருமான் வந்தான்—பைமா]—விடவா

202. னனந்த கருடா சலத்திருப்பான் வந்தான்
மனந்தனிலே வீற்றிருப்பான் வந்தா—னினைந்து

203. பொழிவிழியா னந்தப் புலவர்பிரான் வந்தான்
வழிபுழுகு மெய்யுடையான் வந்தா—னழகொழுகு

204. நீல மலைகுனிய நின்றபிரான் வந்தான்பொன்
மாலை யணிந்திலகு மால்வந்தான்—வேலைப்

---

197. மன்றல் - மணம். அளகம் - கூந்தல். மகரந்தம் - பூந்துகள். தென்றல் - இளங்காற்று. சித்தசன் - காமன்.

198. பதினன்கு புவனங்கள்-கீழ்எழு மேல்எழு உலகுகள். கொத்து-கூட்டம். குழாங் கொள்ள - ஒருங்கு கூட.

199. கோதமன் - கௌதம ருஷி. அகலிகையை இந்திரன் விருப்பு ஒழிய மணந்தமையால் சத்துரு என்ருர். வேதன் - பிரமன். திலோத்தமை - வானுலக ஆடன் மகள். ஓதம் - பேரொலி.

200. வடவேங்கடம் - தமிழகத்தின் வடஎல்லை யாக உள்ள திரு வேங்கட மலை.

201. இக்கண்ணி ஏட்டுப் பிரதியில் இல்லை. (கைமா - யானை. சேவை - காட்சி).

202. அனந்தன் பெயர் கொண்ட சேஷாசலம், கருடன் பெயர் கொண்ட கருடாசலம் என்ற திருமலையில் எழுந்தருளி யிருக்கும் கடவுள்.

203. புழுகு மெய்யுடையான் - புழுகுக் காப்புத் திருமேனி யுடைய பெருமான்.

204. நீலம் - கருமை. மலை குனிய நின்ற பிரான் என்பது திருவேங் கடமுடையான் உத்ஸவ பேரத்துக் குரிய திருப்பெயர். வேலை - கடல்.

205. புடவிலய மாகாமற் பொன்னுதரந் தாங்க
வடவிலையி லேதுயின்முன் வந்தான்—கடல்கடந்த (205)

206. சீராமன் வந்தான் சிவனேசே வித்தாலும்
வாரா விருந்தா னவன்வந்தா—னேரலர்மேன்

207. மங்கை மணவாளன் வந்தான்வந் தானென்றே
பைங்கனகச் சின்னம் பணிமாறக்—கொங்குலவு

## குழாங்கள்.

208. பொன்மறுகி லேபுகலும் பொன்னாட்டுப் பூவைமார்
தன்மகர சாகரத்தின் தையலார்—மின்மழைக்கா

209. யேந்துகுடை யிற்பிறந்தோ ரின்பவணை யிற்பிறந்தார்
காந்தருவர் கிம்புருடர் கன்னிமார்—மாந்தருறை

210. மண்மகளி ராகி மழைகாண் மயிலினமோ
தண்மழைச் சாதகத்தின் சங்கமோ—கண்முகங்கால் (210)

---

205. புடவி - நிலவுலகு. லயம் - ஒடுக்கம். உதரம் - திருவயிறு. வடவிலை - ஆலின் இலை.

206. வாரா விருந்தான் - வரப்பெறாத விருந்தினன். அலர்மேன் மங்கை - நாச்சியார் திருப்பெயர்.

207. பைங்கனகச் சின்னம் - பசிய பொன்னாலாகிய ஊதுகொம்பு. கொங்கு - மணம்.

208. மறுகு - பெருந்தெரு. பொன்னாடு - வானவ ருலகு. பூவைமார் - அங்குள்ள தேவமகளிர். மகர சாகரம் - மகரமீன் நிறைந்த கடல். அதில் வாழும் தையலார் சீரமகளிர்: திருமால் வாழும் இடம் கடலாதலின் 'தன் மகர சாகரம்' என்றார். மின் மழைக்கா - மின்ன லிடியுடன் கூடிய பெரு மழையின் பொருட்டு. ஏந்து குடை - கிருஷ்ணாவதாரத்தில் ஆனிரை காக்கக் குடையாக் கொண்ட கோவர்த்தனகிரி. ஈண்டு மலையிற் பிறந்த மகளிர்.

209. இன்பவணை - திருமாலின் படுக்கை ஆதி சேடன் ஆதலின் அவனுலகிற் றோன்றிய நாகமகளிர் 'அணையிற் பிறந்தார்' எனப்பட்டனர். மற்று, கந்தருவர், கிம்புருடர் கன்னியர்களும், மண்ணுலக மகளிரும்.

210. மழை கண்டு மகிழும் மயிற் கூட்டமோ? குளிர் மழைநீர் பருகும் சாதகப் புள்ளின் கூட்டமோ? பி - ம். தண் மழலை.

211. கஞ்சவன மென்னக் கதித்தெழுமன் னங்களோ
சஞ்சரிகப் புஞ்சச் சமுகமோ—கஞ்சமுகந்

212. திங்க ளெனவே திரண்ட வுடுத்திரளோ
தங்களிலே கூடுஞ் சகோரமோ—மங்கையரோ

213. வென்னமணி மண்டபத்தி லேழுநிலைக் கோபுரத்திற்
சொன்னமணி மாளிகையிற் சூளிகையிற்—பொன்னரங்கிற்

214. சாலைகளிற் சந்திற் சதுக்கத்தில் வேதிகையிற்
சோலைகளிற் பெண்பெருக்கஞ் சோலையாய்—மாலைத்

215. தகையீர் திருத்தேரைத் தாங்கீ ரிருகை
முகையீர் முலைக்களிற்றை முட்டீர்—வகையீர் (215)

216. பெருமானை யென்பார் பெருமானை யெய்தார்க்
கிருமானையுங்கொண் டெதிர்ப்பார்—பொருமானைக்

---

211. கண்களும் முகங்களும் கால்களும் தாமரைக் காடு என்னும் படிக் கூடித் தொக்க அன்னப் பறவைகளோ? சஞ்சரிகப் புஞ்ச சமுகம் - வண்டுகளின் தொகுதி. கஞ்ச முகம் - தாமரைபோன்ற முகம்.

212. திங்கள் - சந்திரன். உடு - நட்சத்திரம். தாமரை போன்ற முகத்தைத் திங்களென மயங்கிக் கருதி நட்சத்திரங்கள் சூழ்ந்த தன்மை யென்றார். மயக்கவணி காண்க. சகோரம் - நிலாமுகிப்புள். இவையும் அங்ஙனமே முகத்தைத் திங்களெனக் கருதி மயங்கின என்றார் மயக்கவணி பற்றி.

213. மணி மண்டபம், ஏழுநிலைக் கோபுரம் இவை சாளுவ அரசர் காலத்துத் திருமலையில் அமைந்தவை எனக் கல்வெட்டுகள் காட்டுகின்றன. சொன்னம் - பொன். சூளிகை - மாட முகப்புகள். அரங்கு - சபை.

214. சாலை - பேரிடம். சந்து - தெருக் கூடுமிடம். சதுக்கம் - நான்கு தெருக் கூடுமிடம். வேதிகை - திண்ணை. சோலைகள் - மலர்வனம். இவ்விரண்டு கண்ணிகளினும் திருக்கோயில் சூழ்ந்த இடப் பெயர்கள் பல வந்துள்ளமை காண்க. பெருக்கம் - பெருங்கூட்டம். மாலை - திருமாலை.

215. தகையீர் - தடுங்கள். தாங்கீர் - நிறுத்துங்கள். இருகை - இரண்டு கைகள். முகை - அரும்பு. வகையீர் - வகுப்பீர்கள்.

216. பெருமானை எய்தார்க்கு - பெரிய மாரீசன் ஆகிய மானை அம்பினால் எய்து வீழ்த்தியவர்க்கு. இருமானையும் - இரண்டு மான்விழிகளையும். பொருமானை - எதிர்க்கும் யானை. குவலயாபீடம் என்ற யானை கண்ணனைக் குத்த வந்த செய்தி குறிக்க.

217. கொம்பொடித்தார் தம்மைமுலைக் கொம்பிற் பொரப்பார்ப்பார்
வம்பொடித்தார் தாராரோ மற்றென்பார்—வெம்பொடியாய்

218. முத்தமணிந் தோமென்பார் மோகித்தோந் தேவரீர்
சித்தமெங்கள் பாக்கியத்தின் சீரென்பார்—கைத்தலத்துச்

219. சங்குக்குச் சங்குகளுஞ் சக்கரத்துக் காழிகளும்
பங்கிட்டோ மென்று பகருவார்—துங்கக்

220. கனமகுடங் கண்டு கதம்பமணி ராசித்
தனமகுட பந்தி சலிப்பார்—புனையுங் (220)

221. திலகமது கண்டு தெளியுமுன்னே காமன்
கலகமது கண்டு கரைவா—ரிலகுமணிக்

222. குண்டலத்தைக் கண்டு குழைந்து பெருவிரலான்
மண்டலத்தைக் கீறி வருந்துவார்—கண்டமதிற்

223. கண்டசரங் காணுமுனே கண்ணுதலோ னைப்பங்கங்
கொண்ட சரங்கண்டு குலுங்குவார்—சண்டவெயில்

---

217. பொர - எதிர்ந்து குத்த. வம்பு - கச்சு. மணமும் ஆம்.

218. முத்தம் வெம்பொடியா யணிந்தோம். மேனியில் உண்டாய காமத் தீயால் மாலை முத்துக்கள் பொடியாயின என்பது குறிப்பு.

219. உமது திருக்கையில் உள்ள திருச்சங்கப் படைக்கலத்துக்கு எமது கையில் உள்ள சங்கு வளையல்களையும், திருச்சக்கரப் படைக்கலத்துக்கு (திருவாழிக்கு) கையில் உள்ள மோதிரங்களையும் வேறு வேறு ஆகப் பகுத்துக் கொடுத்து நின்றோம் என்றவாறு. இவை மேனியினின்று கழன்றன காம வெம்மையால் என்பது குறிப்பு.

220. மகுடம் - கிரீடம். கதம்பம் - கலப்பு. ராசி - இனம். பந்தி - வரிசை.

221. திலகம் - நெற்றிப் பொட்டு. காமன் கலகம் - காமநோய் வருத்தம். கரைவார் - சொல்லுவார்.

222. குண்டலம் - காதணி. குழைந்து - உள்ளம் உருகி. பெரு விரல் - காற் பெருவிரல். மண் தலம் - மண் இடத்தினை. மகளிர் மனம் சலித்த நிலையில் குனிந்து நிலத்தை நோக்கிக் கால் பெரு விரலால் மண்ணைக் கீறிக் கிளைத்து நிற்கும் வருத்தநிலை காட்டியபடி. கண்டம் - கழுத்து.

223. கண்டசரம் - கழுத்து அணிகலன். கண்ணுதலோன் - நெற்றியிற் கண்ணையுடைய சிவன். பங்கம் - வீரத்திரத்தில் தோல்வி. சரம் - அம்பு. மாலும் சிவனும் விற்போர் செய்த புராண வரலாறு காண்க. சண்டம் - வலிமை. வெயில் - ஒளி.

224. வாகு வலயத்து மணிக்குத் துணையாக
மாகு வலயத்து மணியிறைப்பா—ரோகோ

225. கடகமிட்டா ரல்லரிவர் காரிகையார் மெய்யை
வடகமிட்டா ரென்று மருள்வார்—படியாப் (225)

226. பதக்கமிட்டா ரல்லரிவர் பாவையர்க ணெஞ்சை
மதக்கமிட்டா ரென்று மருள்வார்—விதத்தாள

227. மாலைக்கே பச்சைவன மாலைக்கே பொற்கனகச்
சேலைக்கே சேலைச் செலுத்துவார்—கோலமணிச்

228. செஞ்சிலம்பு தண்டை சிலம்பச் சலசலப்பா
நெஞ்சிலம்பா மென்று நிகழ்த்துவார்—மஞ்சிலம்பா

229. மச்சுதரே மங்கையரை யஞ்சம்பா லேவளைக்கு
மிச்சுதரைப் பெற்ற திழுக்கென்பார்—பச்சைமுகச்

230. செங்கனிவா யைக்குழற்கே தித்திக்கப் பங்கிடுகை
யிங்கனியா யங்காணு மென்றுரைப்பார்—நங்கை (230)

---

224 வாகு வலயம் - தோளணி. அதிலுள்ள முத்து மணிகட்கு ஒப்பு ஆக. துணை - ஒப்பு. மா - பெரிய. குவலயத்து - குவளை மலர் போன்ற கண்களினின்று. மணி - நீர்த்துளிகளை. இறைப்பார் - சிந்துவார்.

225. ஓகோ - வியப்பு இடைச்சொல். கடகம் - கைக் கங்கணம். காரிகையார் - பெண்கள். மெய் - உடம்பு. வடகம் - அரைத்த மாவொடு கலந்த காய்த் துண்டுகளின் வற்றல்.

226. பதக்கம் - மார்பிலிடும் அணி. பாவையர்கள் - மகளிர். மதக்கம் - பெருமயக்கு. தரள மாலை - முத்து மாலை.

227. பச்சை வனமாலை - துளசி மாலை. பொற்கனகச் சேலை - பீதாம்பர ஆடை. சேலை - கயல்மீன் போன்ற கண்களை. சேலைக்குச் சேலைச் செலுத்துவார் என்ற சொன்னயம் காண்க.

228. சிலம்பு - காலணி. சலசலப்பு - கலக்கம்.. நெஞ்சில் அம்பு ஆம் - மார்பில் அம்பு பாய்வது போலாகும் என்றபடி.

229. மஞ்சு - மேகம் அம்பு - நீர். அச்சுதரே - திருமாலே. அஞ்சு அம்பால் - முல்லை, அசோகு, நீலம், மா, தாமரை ஆகிய மலர் அம்புகளால். வளைக்கும் - வருத்தும். இச்சுதரை - இந்த மன்மதனை. இழுக்கு - குற்றம்.

230. செங்கனிவாய் - கோவைப் பழம் போன்ற வாய். குழல் - புல்லாங் குழல். தித்திக்க - இனிக்க. பங்கிடுகை - பகுத்துக் கொடுத்தல். இங்கு அநியாயம் காண்க என்று கூறுவார் என்றபடி. இதனை மகளிர் சுவைக்க விரும்பினமை கூறப்பட்டது.

231. ய்லேயிற் பொறிகணவற் காசைகொண்டே மையோ
தலேயிற் பொறியெனவே சாய்வார்—கலேகளுநங்

232. கோல வளேயுமிவர் கோலமாகிப் புணர்ந்த
ஞாலம் பறித்ததென நாணுவார்—நீலவிழி

233. வாங்காம னெஞ்சு மயங்காம லுண்மானங்
தாங்காம னிற்பார் தமக்குள்ளே—யாங்கொருத்தி

## பேதை.

234. மாமனுக்கஞ் சாதசிறு மாமன்போ லெள்ளளவுங்
காமனுக்கஞ் சாத கவின்பேதை—பூமகிணன்

235. கானுற் றரும்பு கரும்பு கரும்புனிதன்
வானுற்றிற் பெற்ற மழவன்னங்—தேனுற்றி (235)

236. லேணிப் பருவத் திளந்தே னெழிலும்பர்
கோணேப் பிடியின் குலக்கன்று—சேணின்

---

231. அலேயிற் பொறி - திருப்பாற் கடலின் கண் உள்ள இலக்குமி. தலேயிற் பொறி - தலேயில் எழுத்து. கலேகள் - ஆடைகள்.

232. கோல வளே - அழகிய வளேயல்கள். கோலம் - ஆண் பன்றி. புணர்ந்த - சேர்ந்த. ஞாலம் - பூமி. திருமால் திருவராகாவதாரத்தில் பூமிப் பிராட்டியைத் தாங்கி வந்த செய்தி காண்க. நிலத்தில் தம் ஆடைகளும் வளே களும் விழுந்த செயலே, நிலம் பறித்த செயலாக ஏறிட்டுரைத்தார் காதற் பிணக்கால்.

233. விழி வாங்காமல் - வைத்த கண் வேறு வாங்காது. குழாங்கள் என்ற பகுதியில் திருவேங்கட முடையானேக் கண்ணுற்று மயங்கிய மகளிர் உருத்திர கணிகையர் என்று அறிக. இதனே 196-வது கண்ணியில் ஆசிரி யர் சுட்டியது காண்க.

234. மாமன் - கம்சன். சிறு மாமன் - சிறியன் ஆகிய திருவின் கேள்வன். (மா - திருமகள். மன் - கேள்வன்.) கவின் - அழகு. பேதை - ஐந்தாண்டு முதல் ஏழாண்டினள் ஆகிய பெண். பூமகிணன்-பூதேவி நாயகன்.

235. கானுறு - திருமலேயில் உள்ள காட்டாறு. கரும்புனிதன் - கரிய திருமேனியன். வானுறு - ஆகாய கங்கை. மழவன்னம் - இளமையான அன்னப் பறவை.

236. ஏணிப் பருவம் - ஏணி வைத்துத் தேன் இறக்கும் பருவம். உம்பர் - வானுலகு. கோணே - இருகல். பிடி - ஐராவதயானே. சேண் - தூரம்

237. மயிலடி மஞ்ஞை மழலையிற் கொஞ்சுங்
குயில்பயில்சிற் றேற்றக் குழமான்—புயலாந்

338. திருமால் பெரியேற்றத் தென்றற் கொழுந்து
வருநாவ லூற்றுள வண்டு—பெருமாள்

239. கொடிவழியி லேயங் குரித்தகொடி யாழ்வார்
தடமருங்கில் சொற்றிருந்து தத்தை—வடமலையிற்

240. கண்ணன்கோ னேரிதனிற் கஞ்சத் தருணமுகை
விண்ணவர் தீர்த்த விரைத்திவலை—யெண்ணின்முளை (240)

241. யந்தியிள வெய்யி லளிப்பிள் ளைகளென்னக்
கொந்தளவு செய்யகருங் கூந்தலாள்—பந்திச்

---

237. மயிலடி - திருமலையிலுள்ள இட விசேடம். மஞ்ஞை - மயில். மழலை - இளஞ்சொல். சிற்றேற்றம் - திருமலையின் முதல் ஏற்றம். குழமான் - இளமையான மான் கன்று. புயல் - மேகம்.

238. பெரியேற்றம் - திருமலையிலுள்ள இட விசேடம். தென்றல் கொழுந்து - இளந் தென்றல் காற்று. நாவலூற்று - இதுவும் திருமலையிலுள்ள இட விசேடம். அளகம் - மகளிர் கூந்தல்.

239. கொடிவழி - ஒரு தீர்த்தப்பெயர் :—“ வீங்கு நீரருவி வேங்கடமென்னு மோங்குயர் மலையத்துச்சி ” என்ற சிலப்பதிகார அடிகட்கு அடியார்க்கு நல்லார் “ கொடிவழி முதலிய தீர்த்தங்கள் ” என்று எழுதிய உரையை நினைவு கூர்க. அங்குரித்த - முளைத்த. ஆழ்வார் தடம் - ஆழ்வார் தீர்த்தம் என்ற கபில தீர்த்தம். தத்தை - கிளி. வடமலை - திருமலை.

240. கோனேரி - சுவாமி புஷ்கரிணி. கஞ்சம் - தாமரை. தருணம் - பருவம். முகை - அரும்பு. விண்ணவர் தீர்த்தம் - தேவதீர்த்தம் என்ற இடம். விரைத்திவலை - நறுமணமுள்ள நீர்த்துளி. காணுறு, வாணுறு, தேனுறு, மயிலடி, சிற்றேற்றம், பெரியேற்றம், நாவலூற்று, கொடிவழி, ஆழ்வார்தடம், கோனேரிஎன்ற திருமலை யிட விசேடங்களுள் முன்புள்ள 98-வது கண்ணியில் ஆழ்வார் தீர்த்தமும், 99-வது கண்ணியில் பெரியேற்றமும், 100-வது கண்ணியில் சிற்றேற்றமும், 101-வது கண்ணியில் காணுறும், 115-வது கண்ணியில் ஆகாய கங்கையும். 27-வது கண்ணியில் நாவலூற்றும் ஆசிரியர் சுட்டியிருப்பது கண்டு கொள்க. குறிஞ்சி நிலப்பகுதி யாய இவ்விடங்களின் இயல்புக்குத் தகப் பேதையின் வருணனை அமைத்துள்ள சிறப்பு பாராட்டத் தக்கது.

241. அந்தி - மாலைப்பொழுது. அளிப்பிள்ளைகள் - இளமையான வண்டின் தொகுதி. கொந்து - தேன். பந்தி - வரிசை.

242. சிரங்கீழ் தாழ்ந்து மீண்டுந் திரும்பவிலங் கேச
னீரைந்துவாங் கொண்ட வெயிற்ருள்—பரன்கிரியிற்

243. சேணுலவு விஞ்சைச் சிருரின் விரல்குழைப்ப
வீணையிசை யென்ன மிழற்றுவாள்—பேணியரி

244. கையமைத்த பாங்கிற் கலியாக் கருங்கடலா
யையமெடுத் தானடக்கு மாலமாய்—வெய்ய

245. சிலைபுகா வம்பாய்த் தினையளவுங் காமன்
கலைபுகா மானிருந்த கண்ணு—ளிலகுமணிக் (245)

246. குஞ்சரக்கோ டிற்ற குறைகண்டோ மால்குடையாய்ச்
செஞ்சிலம்பு வாங்குஞ் செருக்கண்டோ—கஞ்சனனி

247. மாமகுட பங்க மதித்தோ வரக்கன்மக
ளைமகுட பங்கத்தை யுன்னியோ—தாமே

---

242. சிரம் - தலைகள். இலங்கேசன் - இராவணன். எயிற்ருள் - பற்களை யுடையாள். பரன் - திருவேங்கட முடையான். கிரி - மலை.

243. விஞ்சைச் சிருர் - வித்தியாதரச் சிறுவர்கள். விரல் குழைப்ப - விரலால் நெருட. வீணை யிசை - வீணையின் ஓசை. மிழற்றுவாள் - இளஞ் சொற் கூறுவாள். அரி - இராமன்.

244. கையமைத்த - கையால் அமர்த்திய. கலியா - ஒலி செய்யாத. கருங்கடலாய் - கரிய அகன்ற கடல் போலும். ஐயம் எடுத்தான் - பிச்சை கொண்ட சிவன். அடக்கும் ஆலமாய் - தன் கழுத்தில் அடக்கிக் கொண்ட நஞ்சு போலும்.

245. சிலை புகா அம்பாய் - வில்லினிடை நுழையாத அம்பு போலும். தினையளவும் - சிறிதும். காமன் கலை - காமன் கல்வித்தன்மை. மானிருந்த கண்ணுள் - மான் நோக்குப் போன்ற கண்ணை உடையவள். பேதையின் களவில்லாத கண்களுக்கு, அளவின்றி அமர்ந்த கடலும், அடங்கிய நஞ்சும், வில் தொழில் கொள்ளாத அம்பும், காமன் கல்வி கூடாத மருண்ட மான் நோக்கும் ஒப்பாகக் காட்டிய அழகு காண்க.

246. குஞ்சரக் கோடு - குவலயாபீடம் என்ற யானைக்கொம்பு. இற்ற குறை - ஒடிந்த குறைபாடு. மால் - கண்ணன். செஞ்சிலம்பு - கோவர்த்தன மலை. குடையாய் வாங்கும் - கைக்குடையாய்க் கொள்ளும். செரு - போர். கஞ்சன் - கம்சன்.

247. மகுடம் - கிரீடம். பங்கம் - குறை. அரக்கன் மகன் - இராவணன் பிள்ளை யாய இந்திரசித்து. ஓம குடம் - நிடும்பிலை யாக குண்டத்து வைத்த குடங்கள்.

248. யிளைக்க முளைக்கவுரத் தென்றுளே தோன்று
முளைக்கவிசா ரித்த முல்லையாள்—விளைக்கவரு

249. மைக்கூந்த லன்னையர்க்கு வாய்முத்த மீவதற்குக்
கைக்கூலி கேட்குங் கருவூல—மெய்க்கூர்ந்து

250. சுற்ற முருகமணற் சோற்றுக்குட் கல்லாய
முற்றி லெடுத்துலவு முன்கையாள்—மற்று (250)

251. மெழுதரிய மேனி யிளக விளையாடிப்
புழுதிக்குண் மாணிக்கம் போல்வா—ளழகியதன்

252. பாவைவா யைத்திறந்து பால்புகட்டி ரென்றீன்ற
பூவையர் முன்னம் புலம்புவாள்—கோவைவா

253. யேதோ சொலச்செங்கை யேதோ செயத்தானு
மேதோ கண்டேதோபெற் றெய்துவாள்—மாதோ

254. முறுவன் முகத்துநிழன் முன்னோடை வோடிக்
குறுக மிதித்துக் குழைவாள்—சிறுகூழின்

255. மண்ணிற் குழமணத்தான் வைத்தூட்ட மண்ணுண்டான்
வெண்ணெய்க் குழமணத்தான் விண்ணுண்டான்—கண்ணகனீ (255)

---

248. இளைக்க - இளைப்புக் கொள்ள. உரத்துள்ளே முளைக்க என்று - நெஞ்சிற்கு உட்புறத்து மறைவாக முளைக்க என்றவாறு.

249. மை - மேகம். வாய் முத்தம் - வாயால் தரும் முத்தம். கருவூலம் - பொக்கிஷம்.

250. சுற்றம் - இனத்தார். மணற்சோறு-விளையாட்டில் மணல் வீட்டில் இளம்பெண்கள் மணலால் சமைக்கும் சோறு. கல் ஆராய-அரிசியிற் கல் பார்த்தல் போல் பார்க்க. முற்றில் - கைம்முறம்.

251. எழுதரிய மேனி - ஓவியமாய்த் தீட்டுதற்கு அருமையான எழில் உடம்பு. புழுதி - மண். மண்ணுட் கிடந்த மாணிக்கம் ஒப்பு.

252. பாவை - மரப்பொம்மை. புகட்டீர் - உள்வார்ப்பீர். ஈன்ற பூவையர் - தன்னைப் பெற்று வளர்க்கும் அன்னையர். கோவைவாய் - கொவ்வைப் பழம் போன்ற சிவந்த வாய்.

254. முறுவல் - சிரிப்பு. குறுக - அணுக. குழைவாள் - வருந்துவாள்.

255. குழமணத்தான் - மரப்பாவை. வெண்ணெய்க் குழமணத்தான் - வெண்ணெய் திருடியுண்ட சிறுக்கன் ஆகிய கண்ணன்.

256. ராலி னிலேக்கு மசோதைக்குந் தேவகிக்குங்
கோலவி ரேணுகைக்குங் கோசலேக்குஞ்—சீல

257. வதிதியன சூயைக்கு மன்பில்லாப் பேய்க்கு
மதலேயுத திக்கு மருமான்—சதுமறையின்

258. கண்ணிலே பாணியிலே காலிலே கந்தனிலே
மண்ணிலே பாவகத்தே வைகுவான்—பண்ணேத்

259. தருங்குழலாற் பாஞ்சாலி தன்குழலேக் காத்தான்
மருங்குழலா தேயெமக்கு வாய்த்தான்—கருங்குருசி

260. லாதியொரு காதிமக ஞாவேள் விக்கழைத்த
சோதி விருந்திவருந் தூதிஞன்—கீதையுரை (260)

261. நித்தன் மலேகுனிய நின்ருன் வடமலேமேற்
சுத்தன் பசுந்தேரிற் ருேன்றிஞ—னித்திருவைக்

262. கைத்தாயர் மொய்த்தார் கடிதெடுத்துத் தேரிலே
வைத்தார்முன் காணிக்கை வைத்தாற்போ—லுய்த்தார்

---

256. ஆவின் இலே, அசோதைப் பிராட்டி, தேவகி, இரேணுகை, கோசலே, அதிதி, அனசூயை யிடத்தில் திருமால் மகவாய்த் தோன்றியமை பற்றிய பாராட்டு. கோலம் - அழகு. சீலம் - ஒழுக்கம்.

257. அதிதி - காசிபர் மனேவி. அநசூயை - அத்திரி மகருஷி பத்தினி. பேய் - பூதனே. உததி - கடல். மதலே - பிள்ளே. மருமான் - மருமகன்.

258. பாணி - கை. கம் - தலே. பாவகத்தே - கருத்தில். வைகுவான் - தங்குவான். பண் - இசை.

259. குழல் - புல்லாங்குழல். பாஞ்சாலி - துரோபதி. குழல் - கூந்தல். மருங்குழலாதே வாய்த்தான் - வருந்தாது பக்கத்தில் பொருந்தியோன். கருங் குரிசில் - கரிய நிறமுடையான்.

260. ஆதி - முதல். காதிமகன் - விசுவாமித்திர முனிவர். வேள்வி - யாகம். சோதி - ஒளியோன். விருந்திவரும் தூதிஞன் - விதுரர்க்கு விருந்தாய் விரும்பிச் சென்ற தூதன். கீதை - பகவத்கீதை என்ற சாத்திரம்.

261. மலே குனிய நின்ருன் - திருவேங்கடமுடையான் விழா மூர்த்திப் பெயர். திரு - பேதைப் பெண்.

262. கைத்தாயர் - வளர்க்குந் தாயர். மொய்த்தார் - கூடி. கடிது - விரைந்து. காணிக்கைப் பொருளேச் செலுத்தியது போல் செலுத்திஞர்.

263. வணங்குவித்தார் கண்ணுல் வடிவழகர் தம்மை
யணங்குவித்தோம் பாரென் றணைத்தா—ரிணங்குமிளங்

264. கன்று பயமறியாக் கட்டளையெல் லாமறிய
வன்று புதுக்கிஞ ளப்பேதை—நின்றிவளைத்

265. தாருமெனக் காட்டியகை தன்னைப்பா ராண்மருங்கிற்
சேருமெனக் காட்டியகை சிந்தியா—ளாரமணற் (265)

266. சிற்றிலுக்கு வேண்டியயற் செங்கைவளை யைக்கேட்டாள்
பெற்றுகந்தா ரம்புலியாய்ப் பேசினர்—மற்ெருருகை

267. யாழியே தென்று ளணிவிரலைக் காட்டாம
லேழை பருதிகா ணீதென்ருர்—தோழிபோன்

268. மீதிலுற்ற மின்னை விரும்பினள் வேங்கடவர்
காதலுற்ற பொற்பாவை காணென்ருர்—மாதரீர்

269. நற்பாவை யானக்கா ளுடைத் தாருமெனப்
பொற்பாதங் கண்டு புவிபுடைத்தா—ளுற்பாத

---

263. அழகப்பிரானை வணங்கும்படி செய்து கண் பார்வையால் நோய் உறுத்திஞேம் என்று பேதையை அணைத்துக் கொண்டனர். பி - ம். யணங் குவித்தேர்.

264. கட்டளை - விதி. புதுக்கிஞள் - புதுமை செய்தாள்.

265. தாருமெனக் காட்டிய கை. மருங்கு - இடுப்பு: இடையிற் சேருமெனக் காட்டியகை - இரண்டும் திருவேங்கடமுடையான் திருமேனி யில் கீழ்நோக்கிய திருக்கைகள் என்க.

266. சிற்றில் - பேதை விளையாடும் மணல் சிறுவீடு. அயல் - மருங்கு காட்டும் இடத்திருக்கையின் மேல்பக்கமுள்ள இடத்திருக்கரத்துச் சங்கினை விரும்பினுள். வளை - சங்கு. பெற்று - (பெற்றம்) ஆனிரை. உகந்தார் - விரும்பி மேய்த்தவர். அம்புலி - சந்திரன்.

267. ஆழி - சக்கரப்படை. ஏழை - அறிவில்லாச் சிறுபெண்ணே! பருதி - சூரியன்.

268. மீதில் - திருமார்பில். மின்னை - மின்னல் கொடி போன்ற திருமகளை. பொற்பாவை - பொன்ஞல் ஆகிய பாவை. பொன் ஆகிய பாவை எனச் சிலேடை.

269. பாவை யாஞல் நான் விளையாடக் கொடுங்கள் என்று அழகிய திருவடியைக் கண்டு நிலத்திற் கையால் அறைந்தாள். இஃது இளம்பேதை யின் விடாப்பிடி. உற்பாதம் - கெடுகுறி. பி - ம். பாதங் கொண்டு.

270. மேதாம் புவிக்கின் றிளங்கிளியே பாரீன்ற
மாதா வவளலர்மேன் மங்கைகாண்—வேதாவைப்

271. பெற்றவள்கா ணீயும் பெருந்தவங்கள் கூடினான்
மற்றருகில் வாழ வருங்காண்கிற்—சிற்றிலிலே

272. யாயிரம்பொற் பாவையுனக் காடத் தருவமெனத்
தாயர் கொடுநடந்தார் தாங்கியே—தூயதளிர்

273. கட்கமத னார்க்குக் கருடா சலமெனவே
புட்குதிரை தானோடிப் போயதோ—வெட்கியே

274. சேடகிரி யீதென்று தென்றற்றே ருங்குடையுங்
கூடவா வஞ்சிக் குலைந்தவோ—நாடறிய

275. வீழப்பொற் சிங்ககிரி யென்றிபத்தின் பேர்கொண்ட
வேழச் சிலைமுறிந்து விட்டதோ—மாழைநிறச்

276. செந்நாண் மலர்சொரியுஞ் செண்பகவா சற்கண்டு
வின்னா ணலாஞ்சிதறி விட்டவோ—வென்னோதான்

277. தன்னை யொழித்துச் சரந்தொடா தேபோனா
னந்நெடுந்தேர் சென்ற தயல்வீதி—பின்னும்

---

270 இன்று உலகுக்கு எது ஆம். இளங்கிளி போல்வாய் பார்! அவள் பெற்ற தாயாம். அலர்மேல் அமர்ந்த மங்கையாம். வேதா - பிரமன்.

273. கட்கம் - வாள். மதனார் - மன்மதன். கருடாசலம் - ஏழு மலைகளில் ஒன்றன் பெயர். புள் குதிரை - தன் குதிரையாகிய கிளி ஓடிப் போனமையோ?

274. சேடகிரி-ஆதிசேடன் ஆய மலை. ஏழுமலைகளில் ஒன்றன் பெயர். தென்றல் ஆகிய தேர். குடை - சந்திரன். பாம்பு மலையானமையால் அதனால் பற்றப்படுதற்கு அஞ்சித் தென்றலும், சந்திரனும் வெட்கிக் கூட வராது அஞ்சிக் குலைந்தனவோ? என்றார்.

275. சிங்ககிரி - சிம்மாசலம் ஏழுமலைகளில் ஒன்றன் பெயர். இபம் - யானை : அதன் தமிழ்ப் பெயர் வேழம். வேழம் - கரும்புக்கும் பெயர். பெயர் ஒற்றுமையால் சிங்கத்துக்கு வேழம் அஞ்சி வில் முறிந்ததோ? என்றார். மாழை - பொன்.

276. செந்நாண்மலர் - அன்று மலர்ந்த சிவந்த மலர். வில்நாண் - வில் கயிறு. மன்மதன் கரும்பு வில்லுக்கு வண்டுகள் நாண். செந்நிறச் செண்பகத்தின் பெயர் கொண்ட திருவாயிலைக் கண்டு அதனில் மொய்க்காத வண்டுகள் சிதறினவோ? என்றார். சண்பக மலர், வேங்கை மலர்களில் வண்டு மொய்க்காது என்பது மரபு.

277. சரம் தொடாதே - அம்பு தொடுக்காமல். மன்மதன் செயல் ஒழிந்து சென்றமைக்கு நிமித்தம் கூறியவாறு.

## பெதும்பை.

278. அறிந்துமறி யான்போ லயோத்தியிலே யையன்
பிறிந்துநடித் தன்ன பெதும்பை—நிறைந்தகலைத்

279. திங்களெழப் பானுவிழுஞ் செம்மாலை யஞ்சந்திப்
பைங்குவளை யன்ன பருவத்தா—ளெங்கைப்

280. பொருளனையான் கோனேரிப் புன்னைமா நீழற்
குருளையிரு ளன்ன குழலா—ளருளுடையா (280)

281. னின்னமுத னில்லத் திளங்களவு போற்சிறிதே
கன்னமிட நாளாயுங் கண்ணினாள்—வன்ன

282. முருகரும்பு வாய்க்கரும்பு முத்தமெலாங் கிள்ளைக்
குருகருந்த வீணே கொடுப்பா—ளுருகு

283. வரிசை மழலைமொழி மாறிவர வேறே
யுரிசை பிறக்கு முரையா—ளரசை

---

278. இராமன் அயோத்தியில் திருவவதாரம் செய்தது, உலகோர் உள்ளவாறு அறிந்தும் அறியாதும் இருந்தாற் போல என்றபடி. பெதும்பை - எட்டு ஆண்டின் மேல் பதினொரு ஆண்டுவரை யுள்ள பருவப்பெண்.

279. நிறைந்த கலைத்திங்கள் - பூரணச் சந்திரன். பானு - சூரியன். விழுஞ் செம்மாலை - அஸ்தமிக்கும் செவ்வானமுடைய மாலைப் பொழுது. சந்தி - சந்தியாகாலம்.

280. கைப்பொருள் - வைப்புச் செல்வம். வைத்தமாநிதி என்றார் நம்மாழ்வார். (திருவாய். 6. 7. 11.) குருளை - ஆண் பன்றி. ஈண்டு ஆதி வராகப் பெருமாள்.

281. இன்னமுத வில்லம் - பால், தயிர், நெய் ஆகிய இனிய உணவுள்ள ஆயர் இல்லம். இளங்களவு - கண்ணன் சிறுதிருட்டு. கன்னமிட - களவு காண. ஆயும் - நாடும். வன்னம் - நிறம்.

282. முருகு அரும்பு - மணம் தோன்றும். முத்து - ஈண்டு முத்தம். கிள்ளைக்குருகு - கிளி ஆம் பறவை.

283. மழலைச் சொற்கள் ஒரொருகால் வேறுவேறாய் மாறுங்கால் ஒவ்வோர் முறையும் வேறுவேறு சுவை தோன்றும் சொல்லினாள்.

284. முறித்திடுமுக் கூனின் முதுகூனி கூனைக்
குறித்தவுண்டை யன்ன குயத்தாள்—சிறுத்தபிடி

285. யன்ன நடைக்கு மரவகிரித் தெள்ளருவி
யன்ன நடைக்கு மடிகொண்டா—டன்னிலே (285)

286. யின்ன வவயத்துக் கின்ன பணியிசையு
மென்ன வறிதற்கோ ரெல்லையாள்—கன்னலிளங்

287. கோமளமுஞ் சாமளமுங் கொண்டாட்டம் போலிரத
மாமளவைப் பார்ப்பிக்கு மங்கத்தா—டாமரைகள்

288. பூத்த புனற்சாமி புட்கரிணி யங்கணத்தைக்
காத்த பரிமளப்பூங் காவிலே—யேத்தருளி

289. யிட்ட பளிங்கி னெழிற்பீடத் தேதவள
வட்டமதி மான்போல வந்தேறிக்—கட்டங்

290. கருவேழ மூற்றுமற் காத்தபிரான் வெற்பி
லிருவேழ முத்தமிலா மீட்டிப்—பருவேழு (290)

---

284. அரசை முறித்திடு முக்கூன் - சூது, பெண்விழைச்சு, கள்ளுண்ணல் இம்மூன்றும் அரசினுக்குப் பேரிடர் விளைப்பனவாம். சுக்ரநீதி - அத். 1- 109- சு. திருவள்ளுவரும் "இருமனப் பெண்டிருங் கள்ளுங் கவறுந் திருநீக்கப் பட்டார் தொடர்பு" என உரைத்தமை காண்க. காமந்தகரும் இவ்வாறே கூறியுள்ளார். முதுகூனி - இராமபிரானுக்கு இராச்சியபாரத்தை விலக்குவித்தவள். குறித்த வுண்டை - இராமன் விளையாட்டுக் குறிப்பால் எய்த மண்ணுருண்டை. குயம் - முலை. பிடி - பெண்யானை.

285. அரவகிரி-சேஷாசலம். அருவி யன்னம் = நீர்ச்சுனையில் வாழும் அன்னப் பறவை. அடிகொள்ளல் - நடை தொடங்குதல்.

286. அவயவம் - உறுப்புகள். பணி - அணிகலன். கன்னல் - கரும்பு.

287. கோமளம் - இளமை வனப்பு. சாமளம் - கவின் கருமை. இரதம் - சுவை.

288. சாமி புட்கரிணி - திருமலைத் தீர்த்தம். அங்கணம் - நீர்வாரி. பரிமளம் - நறுமணம். பூங்கா - பூஞ்சோலை. பி = ம். யங்கிணற்றை.

289. பளிங்கு - சலவைக்கல். எழிற்பீடம் - அழகிய இருக்கை. தவளம் - வெண்மை.

290. கட்டம் - துன்பம். கருவேழம் - கரிய யானை. வெற்பு - மலை. இருவேழம் - பெரிய கரும்புகள். ஈட்டி - குவித்து.

291. பொற்புக் கழலேந்திப் பூங்கையிலே யன்னைமார்
கற்பித்து வைத்த கழற்பாடற் —சொற்பத்தி

292. யற்பு தனப்ப னாசிருக்கு மத்தாணிப்
பொற்பு ணிரதப் புளியொன் றும் —வெற்பிற்

293. செழுந்திருமா லாடத் திருப்பளியோ டங்கொண்
டெழுந்திருக்கோ னேரி யிரண்டுங் —குழைந்து

294. குழுக்கொண் டுலகமெலாங் கோவிந்தா வென்று
முழக்கி வரும்வழிகண் மூன் றுந் —தழைக்கு

295. நெடுந்தகை வேங்கடத்து நித்தத் திருநா
ணடந்த விழாவீதி நான்குங் —கடந்தபொரு

296. ளன்புடைநா மத்தாரு மப்பரிநா மத்தாருந்
தன்படை நாமத் தடமைந்தும் —பொன்படைக்கு

---

291. பருவேழு பொற்புக்கழல்-பருத்த எழு அழகிய கழற்சிக் காய்கள். கழற்பாடல் - கழங்காடல் பாட்டு. ஸ்ரீ வேதாந்த தேசிகர் பாடியருளிய கழற்பாடல் பத்தும் கொண்ட பிரபந்தம் இப்போது அருகியதாயினும் அஃது இவ்விளையாட்டினை உட்கொண்டு இயற்றிய திருப்பாடல் எனக் கருதலாம். அஃது அன்னைமார் கற்பித்து வைத்தது எனவும், அதன் தொகை பத்து எனவும் இக்கண்ணி தெளிவிக்கின்ற செய்தி காண்க.

292. அப்பன் - மலையப்பன். அத்தாணி - ஆஸ்தானம். பொற்புண் இரதப்புளி - அழகு அமைந்த இன்சுவை யுடைய புளியமரம்.

293. வெற்பு - திருமலை. திருப்பள்ளி ஓடம் - என்பது தெய்வத்தைக் குறிக்கும் தொடர்மொழி - இத் திருப்பள்ளியோடத் திருநாள் திருமலையில் சாளுவ நரசிம்ம அரசர் காலத்தில் அவரால் ஏற்பட்டது எனக் கல்வெட்டுகள் காட்டுகின்றன. திருக்கோனேரி இரண்டு : சுவாமி புஷ்கரிணி வராக புஷ்கரிணி என்பன.

294. வழிகள் மூன்று-மட்ல அநந்தராசா அமைந்த படிக்கட்டு ஏற்றம் : அச்சுத தேவராயர் அமைத்த சந்திரகிரிப் படிவழி: ஆனையேற்றம் ஆக மூன்று வழிகளினும் பத்தர்கள் கோவிந்தநாம முழக்கம் செய்து ஏறுவது வழக்கம்.

295. வீதி நான்கு - திருக் கோயில்சூழ்ந்த நான்கு திருமதிற் புறவீதிகள்.

296. நாமம் - பெயர். பரிநாமம் - ஊர்தியின் பெயர். தன்படை நாமம் - தன் படைக்கலங்கள் ஆகிய சக்கர, சங்க, தனுஸ், கதை, கட்கம் இவற்றின் பெயர்கள் கொண்ட தடங்கள்.

297. மெண்ணே யுடையானை யேத்தச் சிவனேவு
முன்னை யடியான் முகமாறுந்—தன்னையுந்தன்

298. பொற்கனகக் கோயிலையும் போற்றிவரு வாரொழுங்காய்
வற்கமுட னேறு மலையேழு—முற்கூறி

299. யண்ட மளந்த கழலென்று மன்றுகுகன்
கண்டு பணிந்த கழலென்றுங்—குண்டிகையின்

300. மங்கல நன்னீர் மணந்த கழலென்றுங்
கங்கை பிறந்த கழலென்றும்—பொங்காவி (300)

301. லாடு கழலென்று மருமந்த தம்பியுடன்
காடு புகுந்த கழலென்றும்—நாடதற்கு

302. வல்லே நடந்தகழல் வன்சகடு சாடுகழல்
கல்லேந் திழையாகக் கண்டகழ—லெல்லையற

303. வேதந் துதித்தகழல் வெண்ணெய்க்கூத் தாடுகழல்
மாத ரிருவர் வருடுகழன்—மூதண்டம்

---

297. சிவன் ஏவு முன்னையடியான் - சிவன் ஏவலினால் முன்பு திரு மலை அடைந்து வழிபட்ட சுப்பிரமணியன்.

298. கனகக் கோயில் - பொன்வேய்ந்த கர்ப்பக்கிருகம். வற்கம் - (வர்க்கம்) - இனத்தார். ஏழுமலைகளின் பெயர் இந்நூல் தொடக்கத்துக் கண்ணிகளில் கூறப்பட்டன.

299. அண்டமளந்த கழல் - உலகு அளந்த திருவடி. குகன் - வேடு வன்: முருகனும் ஆம். குண்டிகை - சலபாத்திரம்.

300. பிரமன் கமண்டல நீரால் வழிபட்ட திருவடி. பொங்கு அரவு - காளிங்கன் ஆகிய பாம்பு. அருமந்த - அருமருந் தன்ன.

301. தம்பி - இலக்குவன். காடுபுகுந்த கழல் - தண்டகவனம் சென்ற திருவடி.

302. நாடதற்கு வல்லே நடந்த கழல் - பாண்டவர் நாடு பெறுதற்குத் தூது ஆக நடந்த திருவடி. சகடு சாடு கழல் - சகடாசுரனைக் கொன்ற திரு வடி. கண்ணன் செய்தி பாகவதம் பார்க்க. கல் ஏந்திழையாக் கண்ட கழல் - அருங் கல்லினை அகலிகை என்ற ருஷிபத்தினி யாக்கிய திருவடி.

303. வெண்ணெய்க் கூத்து - வெண்ணெய் திருடிக் கூத்தடித்த செய்தி. மாதரிருவர் - திருமகளும் நிலமகளும். வருடு கழல் - மெல்லத் தடவிப் பிடிக்கும் திருவடி. மூதண்டம் - பிரமாண்டத்தின் முகடு.

304. பற்றுகழல் பற்றிப் பாதன் சுமந்தகழ
விற்ற கருவை யெழுப்புகழல்—வெற்றி
305. பரவுகழ லென்றென்று பாடியவ ளாட
வரிவையர்கள் கையமர்த்த வாங்கே—யொருவ (305)
306. னிமலன் மலைகுனிய நின்றகழ லாள
னமலனலர் மேல்மங்கை யாளன்—கமல
307. நயனத் தயனத்தன் ஞானத்தன் முத்தன்
சயனத் தயனநந்த சாந்தன்—வியனத்தன்
308. செக்க ரெரிகுஞ்சிச் செம்மூ விருகோணச்
சக்கா மேந்துந் தடக்கையா—னக்கன்
309. றலைதடவ வந்தவனைச் சாய்த்தான் கனகன்
புலைதடவு சோரிப் புயத்தான்—ஞெலையாப்

---

304. பாதன் சுமந்த கழல் - பாதாழ்வான் முடி தாங்கிச் சென்ற திருவடி நிலை. இற்ற கரு - இறந்த கருப்பக் குழந்தைகள். எழுப்பு கழல் - உயிர் பெறச் செய்த கண்ணன் திருவடி : பாகவத வரலாறு காண்க.

305 அரிவையர் - முதுமகளிர். கையமர்த்த - கைக் குறியால் வாளா இருக்கச் செய்ய.

306. மலை குனிய நின்ற கழலாளன் - திருவேங்கடமுடையான் அருமைத் திருப்பெயர்.

307. கமல நயனத்து அயன் அத்தன் - தாமரை மலர்போன்ற திருக்கண்கள் உடைய பிரமன் தந்தை. முத்தன் - பந்தங்கள் இல்லாதவன். சயனத்து அய்யன் - அநந்த சாந்தன் எனப் பிரித்துக் கொள்க. வியல் நத்தன் - விசாலமான சங்கப்படை யுடையான்.

308. செக்கர் - செம்மை. எரிகுஞ்சி - நெருப்புச் சிகை. மூவிரு கோண சக்கரம் - ஆறு கோணச்சக்கரம். நக்கன் - சிவன்.

309. தலை தடவ வந்தவனைச் சாய்த்தான்-பஸ்மாசுரனைச் சூழ்ச்சியால் இறக்கச் செய்த விஷ்ணு. இவ்வசுரன் தன்கையால் தலை தீண்டப்பட்டவர் இறக்கச் சிவனிடம் வரம் பெற்றவுடன், அதனைப் பரீக்ஷித்தறியுமாறு சிவன் தலையையே தொடச் செல்லச் சிவன் அஞ்சியோட விஷ்ணு தோன்றிச் சூழ்ச்சியால் அவனைக் குளித்து வரச் சொல்ல அவன் அவ்வாறே குளிக்குங்கால் தன் தலையைத் தான் தீண்டியமையால் இறந்தான் என்பது செய்தி. கனகன் - இரணியன். புலை தடவு சோரிப் புயத்தான் - புலால் பொருந்திய இரத்தம் தோய்ந்த தோள்களை உடையான்.

310. பிறப்பலைக்கு நாவாய் பிணிமருந்து கற்றோர்
சிறப்பு மறைபடித்தோர் செல்வ—மறப்பிலா

311. ஞானக் கொழுந்து நமக்கெல்லாம் பேரின்ப
மீனச் சமயர்க் கெதிராணி—வானத்தி

312. லாடுங் கொடித்தே ரணுகுதலு மன்னகழங்
காடுங் கொடியைக்கொண் டன்னைமா—ரோடித்

313. தொழுத்தொழுது நின்றாளைத் தோகையிவன் காணான்
கழற்பெருமா னென்றார்கள் கண்ணால்—விழித்துறவே

314. பூமகளின் வாழ்க்கை பொறாமலோ பொன்னாச
லேம மணிமார்பை யிச்சியாள்—காமன்

315. புனமா வரையிலொரு பூத்தொடா னென்றே
வனமாலை கண்டு மருளா—ளினமாலை

316. பாரா வுரத்திற் பருமுத் தெலாம்பொறுக்கித்
தாருங் கழலாடத் தானென்றாள்—காரிகையே

317. சேய்முத்த நீகேட்டாற் செங்கனிவா யெம்பெருமான்
வாய்முத்தந் தாவென்று வந்தாலோ—தூய்முத்தச்

---

310. பிறப்பு அலைக்கு நாவாய் - பிறவிக் கடலுக்குக் கப்பல். பிணி மருந்து-நோய் தீர்க்கும் மருந்து. கற்றோர் சிறப்பு-கல்வியாளர்க்குத் தலைமை யாளன். வேத மறிந்தோர்க்கு ஐசுவரியம்.

311. ஈனச் சமயர்க்கு - இழிந்த மதத்தினர்க்கு. எதிர்ஆணி - தாக்கும் ஆணி போன்றான். இத்தொடர்கள் திருவேங்கடமுடையான் பாராட்டாக அமைந்தவை.

312. கழங்காடுங் கொடி - கழற்சிக் காய் ஆட்டம் புரியும் பெதும்பைப் பெண்.

313. கழற்பெருமான் - கழற் பாடற்கு உரிய இறைவன். விழித்துற - விழித்துப் பார்த்தலும்.

314. இறைவன் திருமார்பில் திருமகள் அகலாது வாழ்வது கண்டு பொறாமையாலோ? அதனை விரும்பா ளாயினள்.

315. காமன் புனத்துக்குரிய மலர்களுள் ஒரு பூவும் இறைவன் தொடுத்து அணியவில்லை யென்றோ? பச்சைத் துளசி மாலையை விரும்பி னாளில்லை.

316. இனமாலை - மணியினங்களால் ஆகிய மாலைகள். உரம்-திருமார்பு. பரிய முத்துக்களை எல்லாம் பொறுக்கி விளையாடத் தருக என்று வேண்டினாள்.

317. காரிகையே - இளம்பெண்ணே! விளி. இனித் தாயர் கூற்று. சேய்மையில் கிடக்கும் முத்தங்களை நீ கேட்டால் எம்பெருமான் உன் வாய் முத்தம் தா என்று நெருங்கி வந்தாலோ? அன்றி

318. சங்களையுஞ் செங்கையான் றூரங்களைச்சுமப்பா
னெங்களையுந் தெட்டியுனை யேற்றலோ—கொங்கை

319. முளைத்துமுளை யாமுன் முதுக்குறைவு தந்தா
னளைத்திருட னென்றே யவளை—வளைத்தெடுத்துத்

320. தாங்கி மனைபுகுந்தார் தற்பகனு மம்மலைப்பூ
வாங்கினவன் வாங்காமல் வைத்துவிட்டான்—வேங்கடவா (320)

321. தேருந் தனித்தனியே தேவா தியரெல்லா
மாரும் பொருளே யமுதமே—பாரினூ

322. டாடிச் சுரந்தொழுகி யன்பரெனுங் கன்றுகளைத்
தேடிக்கொண் டோடிவருந் தேனுவே—நாடித்தான்

323. றஞ்சப் பரிசனமாஞ் சாலிக் கொழுந்தெழுந்து
விஞ்சச் சொரிகாள மேகமே—நெஞ்சத்திற்

324. கொள்ளுந் திருவடியார் குற்றமெனும் செத்தைகளைத்
தள்ளுந் தரங்கச் சமுத்திரமே—புள்ளெனன

---

318. தூய முத்துக்களை ஈனும் சங்கினை யுடையான், தன் மனை யாட்டியரைச் சுமக்கும் விருப்புடையான் உன்னை விரும்பி எங்களை ஏமாற்றிக் கைக்கொண்டாலோ? என்செய்வம்? என்றாராய்

319. முதுக்குறைவு - பேரறிவு. அளைத் திருடன் - வெண்ணெய் திருடி. இவளுக்கு இவன் இவ்வறிவு தந்தானென்று கூறி அவளை வலியப் பிடித்துத் தம் மனையுட் புகுந்தார்.

320. தற்பகன் - மன்மதன். குறிஞ்சி நிலத்துள்ள தன் மலர்க் கணைகளை எய்ய எடுத்தவன் எய்யாது நின்றொழிந்தான் என்றபடி.

322. ஊடாடி - இடையே புக்கு. தேனு - பசு. ஸ்ரீமந் நாராயணனுக்குப் பக்த வத்ஸலன் என்ற திருப்பெய ருண்மை நினைவு கூர்க.

323. தஞ்சம் - அடைக்கலம். பரிசனம் - அடியார். சாலி - செந்நெல். விஞ்ச - மிகுந்து விளைய. காளமேகம் - மழை பொழியும் மேகம். இஃது உருவகம்.

324. செத்தைகள் - குப்பை. தரங்கம் - அலைகள். கடலில் ஒரு துரும்பும் தூசும் இன்றி இருக்கும் தன்மை தேர்க. கடல் போன்ற அருளுடையான் ஆகிய இறைவன் அடியார் சிதகுகளைக் கொள்வா னல்லன் என்ற சிறப்புக் காண்க.

" தன்னடியார் திறத்தகத்துத் தாமரையா ளாகிலும் சிதகுரைக்குமே
லென்னடியா ரதுசெய்யார் செய்தாரேல் நன்றுசெய்தா ரென்பர்போலும் "

என்ற பெரியாழ்வார் திருமொழியால் தெளிக. (4-9-2.)

325. வண்டினங்க ளென்ன வழிபடுவார் தற்சூழ்ந்து
கண்டு களிக்கின்ற கற்பகமே—தெண்டனுடன் (325)

326. சேவிப்பார் சிந்தைத் தியானா பரணத்தே
தாவித்த சோதிச்சிந் தாமணியே—பாவித்து

327. மன்றாடு பத்தர் மனமிடியை யோட்டுதற்கு
நன்றாக வாய்த்த நவநிதியே—யென்றேத்த

328. நீண்ட கிரண நிறைமடவா ராபரணம்
பூண்ட வயல்வீதி புக்கதா—லாண்டொருத்தி

## மங்கை.

329. செங்கைமதன் செங்கோல் செலுத்தமுத லாரம்ப
மங்கை யெனவே வருமங்கை—யங்கவன்கைக்

330. கேதனமுங் தேருங் கிளிக்குதிரை யுஞ்சிலையுஞ்
சாதனமு நூதனமாய்ச் சாதிப்பாள்—கீதவரி (330)

331. வண்டை யழைத்து மணத்தார் படநடத்திக்
கொண்டை முடித்துக் குடிவைத்தா—ளெண்டிசையும்

332. வன்னிப்போ ரஞ்ச வருந்தா டகைமடிந்த
கன்னிப்போ ரம்பனைய கண்ணினா—ளுன்னிப்போர்

---

325. பலவகைப் பறவைகளும், வண்டினங்களும் போலத் தொண்டர் சூழ்ந்து களித்தற்குரிய கல்பக தரு.

326. சிந்தை - மனம். தியானாபரணம் - தியானம் ஆகிய அணிகலன். தாவித்த - (தாபித்த) பதித்த. சிந்தாமணி - தெய்வ ரத்னம்.

327. மிடி - வறுமை. நவநிதி - தேவருலக பொக்கிஷங்கள் ஒன்பது : சங்கநிதி, பத்மநிதி முதலியவை.

329. மதன் - மன்மதன். மங்கை - பன்னிரண்டாண்டு முதல் பதின் மூன்று முடியும் பருவமுள்ள பெண்.

330. கேதனம் - கொடி. சிலை - வில். சாதனம் - மற்றைக் கருவிகள். நூதனம் - புதுமை. கீதம் - பாடல்.

331. மணத்தார் - மணம் மிக்க மாலை. பட நடத்தி - படியுமாறு செலுத்தி. கொண்டை - தலைமயிர்க் குமை.

332. வன்னிப்போர் - வருணித்துச் சொல்லுபவர்கள். தாடகை - அரக்கி. கன்னிப் போர் - இராமபிரானது முதல் போர். அம்பு அனைய - அம்பினை ஒத்த. உன்னிப்போர் - நினைப்பவர்கள்.

333. சிந்தை யுருகச் சிலையுருகத் தேனொழுகு
மெந்தை குழலிசைபோ லின்சொலா—ளந்தக்

334. கனகமணித் தேர்முகையாய்க் கண்ணன் கிரிக்கே
முனைகுவிந்த கோங்கின் முகையாய்த்—தினமுந்

335. திரட்கடலா யப்பனடி சேவிப்பா ருச்சி
முரட்கடகச் செங்கை முகையா—யுரத்திற் (335)

336. பகையா முகமதியைப் பார்த்தலராக் கஞ்ச
முகையாய் முகிழ்த்த முலையாண்—மிகையாலி

337. னற்றைப் பிரளயத்தி னுதிபோ லன்னையைவிட்
டொற்றைத் துயில்விரும்பு மூற்றத்தாள்—வெற்றிமதன்

338. முப்போதும் மெய்யு முனைப்போதும் போதிலே
இப்போ திதுசெய்யு மென்றறிவா—ளப்போது

339. வெண்கிரணப் பட்டிழைத்து வெண்ணிலா வூசியிலே
பண்கிளவிப் பஞ்சபா ணப்பாணன்—கண்களிக்கத்

---

333. சிந்தை - நெஞ்சம். சிலை - கல். எந்தை குழலிசை - கண்ணன் புல்லாங்குழல் ஓசை.

334. கனகம் - பொன். மூகை - கொடிஞ்சி என்ற தாமரைமொட்டு. கண்ணன் கிரி - திருமலை. முனை குவிந்த கோங்கின் முகை - நுனி குவிந்துள்ள கோங்கின் அரும்பு.

335. திரட் கடலாய் - கடல் போன்ற பெருந்திரளாய் என மாறுக. அப்பன் - மலையப்பன். சேவிப்பார் - தரிசிப்போர். உச்சி - தலையில். கடகம் - கைவளை. முகை - அரும்பு. உரம் - மார்பு.

336. முகமதி - முகச்சந்திரன். அலராக் கஞ்ச முகை - மலராத தாமரை மொட்டு.

337. பிரளய காலத்தில் ஆலின் இலை ஒன்றில் தனித்துத் துயில் கொள்ளும் திருமால் போல - அன்னையை நீங்கித் தான் தனியாகத் தூங்க விரும்புபவள் என்ற நயம் காண்க.

338. முப்போது - காலை, பகல், மாலை என்ற பொழுதுகள். போது - போரும்புகள். இன்ன அரும்பு இன்ன துன்பு செய்யும் என்ற அனுபவம் கொண்டவள்.

339. கிரணம் - ஒளி. பண் கிளவி - இசையாகும் இன்சொல். பஞ்ச பாணப் பாணன் - ஐவகை மலரம்புகளை உடைய மன்மதனாகிய தையற்காரன்.

340. தைத்திறைஞ்சிக் காணிக்கை தந்தமணிப் பந்தேந்தி
வைத்த விரற்பவள வல்லியாய்—மொய்த்தவிழி

341. நீலமாய் மூர னிரைவயிர மாய்நகங்க
ளேலவயி டூரியங்க ளென்னவே—சீலித்த

342. வாளிக் குழைக்கனக மாணிக்கச் செங்கதிருந்
தோளிற் கடகச் சுடர்க்கொழுந்தும்—பாளிக்கக்

343. கைக்கு வளைபுலம்பக் காற்குச் சிலம்பரற்ற
மைக்குழலுக் கேயெழுந்து வண்டார்ப்பப்—பொய்க்கு

344. மருங்கு மருங்கெனவே வண்காஞ்சி பொங்க
விரங்கி யளித்தமத னேங்கச்—சுருங்கி

345. யெழுந்து மிருந்து மிழைந்துமிள மேனிக்
கொழுந்து வருந்தக் குழைந்து—நுழைந்து

---

340. மங்கை ஆடும் பந்து வெண்மையான பட்டினால் வெண்ணிலா ஊசியால் மன்மதன் ஆய தையற்காரன் தைத்து அவளை வழிபட்டுத் தன் காணிக்கையாகத் தந்த தென்றூர், மங்கை மதன விளையாட்டுக் குரியாள் எனத் தேற்றுதற்கு. அப்பந்து அவள் கையகத்துச் செவ்வொளி நிழல் பெற லால் அவள் விரல்கள் பவள வல்லியாகவும்.

341. விழிகளின் கரிய ஒளி நிழலால் நீலமாகவும் பல்லின் வரிசை ஒளி நிழலால் வயிர மாகவும், நகங்களின் ஒளி நிழலால் வைடூரியங்களாகவும் ஒளி பெருகிக் காட்ட.

342. வாளி - காதணி. குழை - காதில் அணியும் குண்டலம். அதின் மாணிக்க மணியின் சிவந்த கதிர்களும். கடகம் - கைவளை. பாளிக்க - பளபளக்க.

343. கைக்குவளை - கையில் உள்ள வளையல். புலம்ப - ஒலிப்ப. காற்குச் சிலம்பு - காலில் உள்ள சிலம்புகள். ஆர்ப்ப - ஓசையிட. மைக்குழ லுக்கே - கரிய கூந்தலில். கு - உருபு மயக்கம்.

344. மருங்கு - இடை. காஞ்சி - இடையில் அணியும் எண் கோவை அணிகலன். பொங்க - ஒலிப்ப. மன்மதனும் ஏக்கம் கொள்ள.

345. சுருங்கி எழுந்தும், இருந்தும், இழைந்தும், குழைந்தும், சுழன் றும் பந்தடித்தமை ஈண்டு ஆசிரியர் கூறியது சிலப்பதிகாரம் வாழ்த்துக் காதைக் கந்துக வரிப்பாட்டுடன் ஒப்பிடற்பாலது.

“ பின்னு முன்னு மெங்கணும் பெயர்ந்து வந்தெ ழுந்துலாய்
மின்னு மின்னி ளங்கொடி வியனி லத்தி ழிந்தெனத்
தென்னன் வாழ்க வாழ்கவென்று சென்று பந்த டித்துமே
தேவ ரார மார்பன் வாழ்க வென்று பந்த டித்துமே ”.

346. விழிகுழையி லேபுரள வெங்புறத்தைச் சாய்த்துச்
சுழலுறவே நின்று சுழன்று—நிழனிழ

347. லாய்ப்பந் தடித்த தமையுமினி யென்பாரை
வாய்ப்பந் தடித்து மலைந்தாடத்—தாய்ப்பந்தி

348. யன்னமே தோகையே யாரணங்கே பொற்கொம்பே
பன்னிதியே மானே பசுங்கொடியே—மின்னரசே

349. யிந்த முலைக்கெதிரென் றெற்றினையே பூங்குதிக்குத்
தந்த வுவமையெனச் சாடினையோ—பந்து

350. மடிக்கவடிக் கக்கிளம்பு மத்துடனே. வேண்டா
பிடித்தமுட்டி யென்று பிடித்தார்—கொடித்தேருங் (350)

351. காயா மலரைக் கருமுகிலைக் கார்க்கடலை
மாயா மயத்தை மாகதத்தைத்—தூய

352. களங்கனியைப் பச்சிலையைக் கண்ணூர் மணியை
வளங்குலவு நீல மலையை—யிளங்குரவை

353. யோதிமங்க ளெல்லா முகந்தமல ரோடைதனை
நீதி மலைகுனிய நின்றதனை—வீதியிலே

---

346. குழையிலே விழி புரள. வெங்புறம் - முதுகுப்புறம்.

347. வாய்ப் பந்தடித்து - ஆரவாரத்தால் பேசி. மலைந்து - முனைந்து. தாய்ப்பந்தி - தாயர் கூட்டம்.

348. அன்னமே! தோகையே! அணங்கே! பொற்கொம்பே! பலநிதியே! மானே! பசுங்கொடியே! மின்னரசே! என்பன தாயர் விளிச்சொற்கள்.

349. பூங்குதி - அழகிய குதிங்கால். உவமை - ஒப்பு. சாடினை - அடித்தாய்.

350. கிளம்பு - மேல் எழும். முட்டி - எதிர்ப்பு.

351. காயாமலர், கருமுகில், கார்க்கடல் என்பன திருவேங்கடமுடையானுக் குரிய பாராட்டுப் பெயர்கள். மாயா மயம் - அமானுஷ சக்தியுடையான். "மயக்குடை மாயைகள் வானிலும் பெரியன வல்லன்"—நம்மாழ்வார். (1-3-10.)

352. மாகதம், களங்கனி, பச்சிலை, மணி, நீலமலை என்பனவும் அங்ஙனமே இறைவன் பாராட்டுப் பெயர்கள். குரவை - மகளிர் கைகோத்து வட்டமாக நின்று ஆடும் ஒருவகை ஆடல்.

353. ஓதிமம் - அன்னம். மலர் ஓடை, மலைகுனிய நின்றது என்பனவும் அவ்வகைப் பாராட்டே.

354. கொண்டு வாவுங் கொடியும் பிடியெனப்போய்க்
கண்டுபிறி தொன்றுங் கண்டாளோ—புண்டரிகப்

355. பாணியே செங்கமலப் பாதமே கஞ்சவயன்
காணியே தாமரைச்செங் கண்களே—நாணளினச் (355)

356. செம்முகமே கோகனகச் செங்கனிவா யேயிவைதா
னம்முகமே மோந்துகொள்ள நண்ணுமோ—விம்முலையு

357. மொற்றப் பெறுமே யுரத்தாள் புறமிருக்க
மற்றப் புறமெனக்கு வாய்க்குமே—பெற்றத்தாற்

358. பெற்றபல னென்றுளத்தே பேசினுண் மன்மதனு
மற்றமனந் தானறிய மாட்டானோ—பொற்றொடிநீ

359. பார்த்த வனசமிதோ பாரென்று வில்லிலே
கோர்த்து நினைவிலொரு கோல்விட்டான்—வார்த்தை

360. மறந்தாள் கலையிழந்தாண் மாமம்போ னின்று
டுறந்தா ளறிவுவளை சோர்ந்தாள்—பெறுந்தாயர் (360)

361. பச்சை முகிலின் பவனியிவ ளைப்புதிதா
யிச்சையறி வித்த தென்றறிந்தா—ரச்சுதரே

---

354. கொடி - மங்கைப் பருவப்பெண். பிடியெனப் போய் - பெண் யானை போலச் சென்று. புண்டரிகம் - தாமரை.

355. பாணி - கை. கஞ்சவயன் காணி - பிரமன் தோன்றுதற்கு இடமாகிய திருக்கொப்பூழ். நாள் நளினம் - அன்று மலர்ந்த தாமரை.

356. கோகனம் - தாமரை. கனிவாய் - கோவைப்பழம் போன்ற வாய்.

357. உரத்தாள்-திருமார்பிடம் கொண்ட திருமகள். மற்று அப்புறம். பெற்றத்தால் - அடைந்ததனால்.

358. உளத்தே பேசினாள் - மனசில் எண்ணினாள். அம்மனம் - அவள் எண்ணம். மாட்டானோ? = மாட்டுவன் என்பது குறிப்பு.

359. வனசம் - தாமரை. நீ பார்த்த வனசம் - மங்கை திருவேங்கடமுடையான் திருமேனியில் கண்ட தாமரைகளைச் சுட்டிக் கூறியபடி. நினைவில் ஒருகோல் - நினைவினை ஒழிக்கின்ற தாமரை மலர் அம்பு. இதன் செயல் சுப்பிரயோகம் என்ப.

360. கலை - ஆடை. வளை - கையில் சங்கு வளை.

361. பச்சை முகில் - கருநிற மேகம் போன்ற திருவேங்கடமுடையான். பவனி - உலா. இச்சை - காதல். அச்சுதரே! - திருமாலே!

362. தாளின் மருகன் சலதியிலே யுண்ணவரக்
காள விடமிட்ட கள்வரே—வாளரே

363. மைத்துனர்போற் சேயுடனே வற்சா பகாணத்திற்
சித்துவித்தை காட்டுந் திருடரே—சத்திரத்துத்

364. தேட்டம் படைத்த திருத்தமைய னாகத்திற்
றேட்டந் தனைப்பிடுங்குஞ் சோரரே—கூட்டுதயிர்

365. தற்கரமெல் லாம்பொசித்த தற்கரரே கோமுனிபாற்
கற்க விருந்தகன்னக் காரரே—விற்கரரே (365)

366. யாகத் தொருத்தி யமையாதோ தெய்வவனு
போகப் புவிமடந்தை போதாதோ—மோகனமாஞ்

367. சேயரிக்க ணீளை தெவிட்டாதோ முன்பதினா
றாயிரவர் புல்கியது மாற்றாதோ—நேயமா

---

362. தாளின் மருகன் - திருமால் திருவடியில் பிறந்த கங்கையைச் சிவன் மணந்தமையால் ஈண்டு மருகன் எனப்பட்டான். சலதி - சமுத்திரம். காளவிடம் - கரிய விஷம். வாளரே - நாந்தகம் என்ற வாள் உடையவரே.

363. மைத்துனர் போல் - மைத்துன முறைமை போல. சேயுடனே - பிள்ளையாகிய பிரமனுடன். வற்சம் - பசுக் கன்று. வற்சாபகாணம் - கன்று களவுச் செய்தி. சித்து வித்தை - விசித்திரச் செயல்கள். பாகவத கதை - பிரமன் இடைச்சிறார் ஆன் கன்றுகளைக் கவர்ந்து ஒளிக்கக் கண்ணன் அது தெரிந்து தானே ஆய்ச்சிறார் ஆன் கன்றுகளாக வடிவு கொண்டு ஓர் ஆண்டு திருவிளையாடல் செய்தமை அறிக. சத்திரம் - யாகம்.

364. தேட்டம் - தேடிய நிதி. தமையனார் - இந்திரன். திருமால் இந்திரனுக்குத் தம்பியாகத் தோன்றி உபேந்திரனெனப் பெயர் பெற்ற செய்தி யறிக. அவன் சத்தியபாமையின் பொருட்டு இந்திரனுலகில் உள்ள பாரிசாத மரத்தினை வேரோடு பறித்து வந்து அவள் வீட்டுக் கொல்லையில் நட்டுவைத்த வரலாறு. சோரர் - கள்வர்.

365. தற்கரம் (தக்ரம்) - மோர். தற்கரர் - கள்வர். (தஸ்கரம்-திருட்டு) கோமுனி - சாந்திபினி. கன்னக்காரர் - திருடர். விற்கரர் - வில்லைக் கையில் உடையவர்.

366. ஆகத்து - திருமார்பில். ஒருத்தி - திருமகள். புவிமடந்தை - நிலமகள். மோகனம் - மயக்கு.

367. சேயரிக் கண் - செவ்வரி படர்ந்த கண். நீளை - நீளாதேவி. கோபக் கன்னியர்கள் பதினாறாயிரவர். புல்கியது - அணைந்தது.

368. மித்திர் விந்தை வெகுளாளோ தேவரீர்
சத்திய பாமை சலியாளோ—பத்திரைதான்

369. வையாளோ சாம்பவதி வம்புரையா ளோபின்னை
நையாளோ காளிந்தி நாணுளோ—செய்ய

370. வுருக்குமிணி நெஞ்சை யுருக்கிவை யாளோ
கருக்க விராதை கடாளோ—செருக்குஞ் (370)

371. சுகந்தை யிலக்கணை தொல்லைநாட் கொண்ட
மிகுந்த மடவார் வெறுரோ—புகுந்தெமது

372. மங்கையவர்க் குத்தரிக்க வல்லாளோ வென்றயலை
யங்கைதனி லேந்தி யகம்புகுந்தார்—சங்கைத்

373. தரித்தபிரான் பொற்றேருந் தாண்டியயல் வீதிக்
கருத்தி யுடனடைந்த தப்பா—லொருத்தி

## மடந்தை.

374. அணங்கெனமுன் பின்பருவ மாறுநடு வைத்து
வணங்கவர சாளு மடந்தை—யிணங்கியே

---

368. இக்கண்ணி முதல் மித்திரவிந்தை, சத்தியபாமை, பத்திரை, சாம்பவதி, பின்னைப்பிராட்டி, காளிந்தி, உருக்குமிணி, இராதை, இலக்கணை என்ற கண்ணன் தேவியர்கள் பெயர்களை எடுத்துக் காட்டிக் கண்ணனைப் பழிக்கின்றமை அறிக. இவர்களைக் கண்ணன் மணந்த செய்தி பாகவத புராணத்தால் அறிக. வெகுளாளோ - கோபிக்க மாட்டாளோ. சலியாளோ - சஞ்சலப் படாளோ.

369. வையாளோ - வசவுரையாளோ. வம்புரையாளோ - வலிந்து தொல்லை கூறுளோ. நையாளோ - மெலியாளோ. நாணுளோ - வெட்கமடையாளோ.

370. உருக்கி வையாளோ - நெஞ்சு கலங்கிக் குலையாளோ. கருக்கக் கடாளோ - பெரிதும் ஐயுற மாட்டாளோ. செருக்கும் - களிப்புறும்.

371. சுகந்தை - நன் மணமுள்ளவள். மடவார் - இளம் பெண்டிர். வெறுரோ - வெறுத்தல் செய்யாரோ.

372. உத்தரிக்க - மறுமொழி கூற. அகம் - வீடு.

374. அணங்கு - தெய்வ மகள். முன்பின் பருவம் ஆறும் - மகளிர் பருவம் ஏழு என்பது தமிழ் வழக்கு: பேதை, பெதும்பை, மங்கை, மடந்தை, அரிவை, தெரிவை, பேரிளம்பெண் என்பன: இவற்றுள் மடந்தைப் பருவம் இடையதாய் அமைந்து தனக்கு முன் மூன்றும் பின் மூன்றும் வேறு பருவங்கள் ஆக இருத்தலின் இது வணங்கப்படுவதாயிற்று என்றார். இப் பருவத்துக்கு ஆண்டு பதினைன்கு முதல் பத்தொன்பது ஆகும்.

375. மரந்தர்க்குப் பேசி வரமளிப்பான் வேங்கடத்திற்
கூந்தற் கமுகனைய கூந்தலாள்— வேந்தன்பா (375)

376. லன்றுதிரு வாழி யருளினான் வெற்பிலே
நின்று தவழ்பிறைபோ னெற்றியா—ளென்றுந்தன்

377. கைகுத்தி வைகுந்தங் காட்டுவான் கோனேரிப்
பொய்கைத் தரங்கப் புருவத்தா —ளுய்கைக்கு

378. வல்வாய் கொடுபலிசை வாங்குவா னாலயத்து
நல்வாயிற் செண்பகப்பூ நாசியாள்—வில்வாய்ந்த

379. கூன்கொண் டதுநிமிர்க்குங் கொள்கையான் பொற்கோயில்
மான்கொண்ட கோல மதர்விழியா—ளூன்கொண்ட

---

375. திருவேங்கடமுடையான் இக் கலிகால நாளில் தொண்டர் ஆகிய மக்களுக்குக் கனவில் தோன்றிப் பேசி வரந் தருகின்றான் என்பர்.

376. வேந்தன் - தொண்டைமான் : தொண்டைமானுக்குப் பகைவரால் போர் நேர்ந்தபோது அவன் வெற்றி பெறுமாறு திருவேங்கடமுடையான் தன் சங்க சக்கரப் படைக்கலங்களை நல்கினன் என்பது தலபுராணச் செய்தி.

377. கை குத்தி வைகுந்தம் காட்டுவான் - திருவேங்கட முடையான் திருமேனியில் வலத் திருக்கையின் திருக்கோலம் இருந்தபடி. பொய்கை - தீர்த்தம். தரங்கம் - அலை. உய்கை - பிழைப்பு.

378. வல்வாய் - வன்சொல். பலிசை - வட்டி. ஆலயம் - திருக்கோவில். திருவாயில் " செண்பக வாசல் " எனப் பெயர் பெறும் : 36-வது கண்ணி பார்க்க. செண்பக மலரை மகளிர் மூக்குக்கு உவமை கூறுவது மரபு.

379. வில் வாய்ந்த கூன் - வில் போல் வளைந்த உடம்புக் கோணல். கண்ணன் நைகவக்கிரை என்ற கூனியின் கூன் நிமிர்த்த செய்தி. மான் கொண்ட - மான் பார்வை போன்ற. மதர்விழி - களிப்புள்ள கண். திருவேங்கட முடையான் திருவருள் திறம் பற்றிப் பண்டைப் பெரியார் பாடிய செய்யுள் கீழ் வருவதும் நோக்குக.

கூனின்று போனவன் றானிமிர்ந் தோடக் குருடன்கொம்பிற்
றேனென்று காட்ட முடவன் குடங்கொண்டத் தேன்பிழியந்
தானின்ற வூமை தனக்கென்று கேட்கத் தருவர்வரம்
வானின்ற சோலை புடைசூழ் வடமலை மாயவரே.

பித்துமல டூமைமுடம் பேய்குருடு கூன்செவிடு
மெய்த்துயர்நோய் தீர்த்தருளும் வேங்கடமே—பத்தருக்கு
வந்ததுக்கங் காப்பான் மலருந் தியினுலகந்
தந்ததுக்கங் காப்பான் றலம்.

திருவேங்கட மாலை— 15-காண்க.

இச்செய்யுளிற் குறித்த அருட்டன்மை பின்வரும் கண்ணிகளில் குறிப்பிடுவதும் காண்க.

380. வெள்ளை கருமை விலக்குவான் பூஞ்சுனையில்
வள்ளை யிருந்த மணிக்குழையாள்—பிள்ளையிலாக்

381. கெண்டைவிழி யார்தமது கேள்விகேட் பான்புனத்திற்
றொண்டை பழுத்த துவர்வாயா—ளெண்டிசையுங்

382. கல்லுங் குருடருக்குங் கண்பலிப்பான் வண்பொருப்பில்
முல்லை முகையா முறுவலா—ணல்லறிவை

383. யென்னிற் சிறியார்க்கு மீவான்சி லோச்சயத்துக்
கன்னிக் கமுகனைய கண்டத்தா—ளின்னுரையை

384. யூமர்க் கருளு முபகாரன் சிங்ககிரி
யேமக் கழையா மிளந்தோளாண்—மாமுடவர்

385. கைவிஞ்சி யோடவே காலீவான் வண்சிலம்பின்
மொய்விஞ்சை யாழ்வீணை முன்கையாள்—பொய்விஞ்ச

386. ருங்கார மந்திரத்தை யோட்டுவான் கானுற்றி
லங்காந்த செங்காந்த ளங்கையா—ளிங்கார்க்குங்

387. கொச்சை மிடியைக் குறைப்பான் குலாவுபொழிற்
பச்சை யிளநீர்ப் பணைமுலையாண்—முச்சகமுங்

---

380. ஊன் கொண்ட வெள்ளை கருமை - உடம்பில் உண்டாம் வெண் குட்டம், கருமேகம் ஆகிய கொடு நோய்கள். வள்ளை - வள்ளைக் கொடி போன்ற காதுகள். குழை - குண்டலம்.

381. கெண்டை விழியார் - கெண்டை மீன் போன்ற கண்களை உடைய இள மகளிர். கேள்வி - பிரார்த்தனை. புனம் - தோட்டம். தொண்டை - கோவைப் பழம். துவர் - சிவப்பு.

382. பொருப்பு - மலை. முகை - அரும்பு. முறுவல் - பல். பி - ம். கண் கொடுப்பான்.

383. நூலாசிரியர் திருவேங்கடமுடையான் திருவருள் பெற்றமையும் அது பெற்றும் தாம் கொண்ட அடக்கப் பெரும் பண்பும் தெளிதாக் கூறி யுள்ளமை காண்க. சிலோச்சயம் - மலை. கன்னி - இளமை. கண்டம் - கழுத்து.

384. ஊமர் - வாய் பேசாக் குறையுடையார். சிங்ககிரி - சிம்மாசலம். ஏமம் - இன்பம். கழை - கரும்பு. முடவர் - கை கால் உறுப்புக் குறை யுடையார்.

385. ஈவான் - கொடுப்பான். சிலம்பு - மலை. விஞ்சை - வித்தை.

386. உங்காரம் - அச்சுறுத்தும் ஒலி. அங்காந்த - வாய்விரிந்த, மலர்ந்த செங்காந்தள் மாதர் சிவந்த கைகளுக்கு ஒப்பு உரைப்பது.

387. கொச்சை - இழிவு. மிடி - வறுமை. பணை - பெருமை. முச்சகம் - மூன்று உலகு.

388. தெண்டனிடக் கூடுந் திருநா ளொனுத்திரண்டு
வண்டொழுகு ரோமா வலியினு—டொண்டுகொள

389. முந்திக் கனுக்காட்டு மூர்த்தியா னுவலூற்
றுந்திச் சுழிபோலு முந்தியாள்—வந்தவரைத்

390. தன்னடிமை யாக்கித் தலைமயிரைக் கண்டிப்பான்
வன்னமலை வல்லி மருங்கினுள்—கன்னமிட்டு (390)

391. வேடு பகிர்ந்த வெறுங்கையான் புட்சயிலத்
தாடு மணிநாக வல்குலாள்—கோடுதொறு

392. மேன்று வழிபார்த் தெதிர்கொள்வான் பொன்மலைக்கே
தோன்று கதலித் தொடையினுள்—வான்றோயச்

393. செய்த சிறப்பருந்துஞ் செங்கனிவா யன்கிரியிற்
கைதை யலவன்முழங் காலினு—ளெய்தவரங்

394. கொள்ள விடுவான் குளிர்பாண் டவதீர்த்தக்
கள்ள வராலின் கணைக்காலா—ளள்ளியள்ளி

395. யுண்பதற்குச் சேர்வைக் கொழியாத வாசலான்
வண்பதும வாவி மலர்த்தாளாள்—பெண்பெருமா (395)

---

388. தெண்டன் - வணக்கம். திருநாள் - திருவிழா. வண்டு ஒழுகு - வண்டின் தொடர்பு போல் உள்ள. உரோமாவலி - மயிர் வரிசை.

389. நாவலூற்று - இது நேரெதிர் மண்டபத்து அண்மையில் உள்ளது. உந்திச் சுழி - நீர்ச் சுழி.

390. திருவேங்கடமுடையான் திருக்கோயிலுக்கு வருவோர் யாவரும் தலைமயிரை மொட்டையிட்டுச் செல்லும் வழக்கு பன்னூறு ஆண்டுகளாக உள்ளமை இதனுல் அறிக. வன்னம் - அழகு. மலைவல்லி - மலைக்கொடி. மருங்கு - இடை. கன்னமிட்டு - களவுசெய்யக் கன்னக்கோலால் துளையிட்டு.

391. வேடு - வேடுவர். பகிர்ந்த - பங்கிட்டுக் கொண்ட. இச்செய்தியின் குறிப்பினை முன் 42-ம் கண்ணியினும் பின்வரும் 417-ம் கண்ணியினும் காண்க. புட்சயிலம் - கருடாசலம்: ஏழு மலைகளுள் ஒன்று. கோடு - மலை.

392. கதலி - வாழை வான் தோய - வான் அளாவ.

393 சிறப்பு - விசேட ஆராதனை. செங்கனி வாயன் - சிவந்த கோவைப் பழம் போன்ற திருவாய் உடையான். கைதை - தாழை. அலவன் - நண்டு.

394. பாண்டவ தீர்த்தம் - திருமலைத் தீர்த்தங்களுள் ஒன்று: 25-ம் கண்ணி பார்க்க. கள்ள வரால் - நீரில் மறைந்து வாழும் வரால் மீன்.

395. தளிகையும் சேவையும் நீங்குதல் இல்லாத கோயில் திருவாயில் என்றபடி. பதும வாவி - தாமரைத் தடம். பெண் பெருமாள் - மகளிருள் தலைவி.

396. ளன்னவமு தென்னமயி லென்னமணி யென்னமதி
யென்னநிதி யென்னரதி யென்னவே—கன்னியிட

397. மாடத்து வந்தேறி மாதார் ரிட்டமணிப்
பீடத் திருந்தளகப் பின்னலிலே—யாடுகுல

398. வண்டு சுருதிதர வண்கோ கிலக்குலங்கள்
கண்டு பறிகொடுத்தோங் கண்டமென—விண்டு

399. பவள மசையாமற் பாடுமிளந் தென்ற
லவள திசையோ டசையத்—துவளுமிடை

400. நொய்யதென்ன நர்விலிசை நோக்காம லெல்லோரு
நைய விளரிநரம் பேங்கப்—பையவே (400)

401. பாடமுத விட்டாள் பாவையரெல் லாம்பணிந்து
மாட முருகிவிடு மாமயிலே—கூடவரு

40 . மெங்களுக்கா கத்தவிரென் றேத்தினர் வெண்ணிலாத்
திங்களெல்லாம் பொங்கச் சிரித்திட்டா—ளங்கே

403. வடவேங் கடத்தரசு மாமனிட மாமன்
வடவா லிலைத்துயிலு மத்திக்—கடலான

---

396. அமுது, மயில், மணி, மதி, நிதி, இரதி என்னுமாறு. கன்னி - இள மகள்.

397. மாதரார் - தோழியர். மணிப்பீடம் - இரத்தினம் இழைத்த இருக்கை. அளகம் - தலைமயிர். பின்னல் - சடை.

398. சுருதி - இசை யோசை. கோகிலக் குலம் - குயில் கூட்டம். கண்டம் - இசைக்குரல். விண்டு - வாய் திறந்து.

399. பவளம் - உதடுகள். பாடுங்கால் உதடு அசையும் இசை விகாரம் இன்றி. இளந்தென்றல் - இளம்பெண் என்ற குறிப்பு. துவளும் இடை - சாயும் இடுப்பு.

400. நொய்யது - மெல்லியது. விளரி நரம்பு - ஏழு சுருதிகளில் ஒன்று.

401. முதலிட்டாள் - தொடங்கினள். மாடம் உருகி விடும் என்றது - இசைக்குக் கல்லும் உருகும் என்ற கொள்கையினல்.

402. திங்கள் எல்லாம் வெண்ணிலாப் பொங்க - என்றது முகத்தில் ஒளி மிகும்படிச் சிரித்தாள் என்றபடி.

403. வேங்கடத்து அரசு. மா - இலக்குமி. மன் இடம் ஆம் மன் - பொருந்துதற்கு இடமாகிய பெருமான் : ஸ்ரீநிவாசன். வடவால் - வடம் ஆகிய ஆலமரம். மத்தி - நடு.

404. நாரத்தன் மாவலிக்கு நல்கியிடு மாதளையான்
பாரத்தனைக் கும்ப லாவினான்—காரொத்த

405. சந்தனத்தான் கற்றோர் தமரத்தை யான்பொற்றோர்
வந்ததெனச் சின்னம் மலைந்தார்ப்ப—வந்தரத்துச்

406. செம்மாட நீங்கித் தெருவெய்தித் தேராளர்
தம்மா டணுகிச் சரணென்று—ளம்மர்

407. விதுமதனன் றாதை வெகுதூர்த்த னென்றே
பதுமமனைத் தாய்க்குப் பரிந்தோ—கதுவித்

408. தொழத்தொழவே வெட்டவருந் துட்டரினம் போலே
யழுத்தமா மாலழுத்தி யார்த்தான்—கழுத்தளவு

409. முற்றித் தலைக்கொண்ட மோகம் பிணைவிடுமோ
பற்றிக்கொள் ளாதோ படுத்தாதோ—வற்றிப்

410. பசந்தாள் பறந்தாள் பயந்தாள் பணிந்தா
ளசைந்தா ளலைந்தா ளயர்ந்தா—ளிசைந்தாளோ

411. செங்குவளை தானொழுக்குந் தெண்ணீ ரொழுக்குடனே
சங்குவளை தானொழுகத் தானின்று—ளிங்கிவளைப்

---

404. நாரம் - நீர் - நீரிலிருப்பவன். மாவலி - மகாபலி என்ற அசுரன். நல்கியிடு மாதளையான் - கொடுக்கும் பெரிய விலங்கு உடையான். பார் அத்தனைக்கும் பல் ஆவினான் - உலகு அளவினதான கூட்டமுள்ள ஆன் நிரையுடையான்.

405. சந்தனத்தான் - தேர் உடையான். தமரத்தை - தம்மவர் ஆம் தன்மை. சின்னம் - ஊதுகொம்பு.

403-ம் கண்ணி முதல் இதுவரை அரசு, மா, ஆல், அத்தி, நாரத்தை, மாவலி, மாதளை, பலா, சந்தனம், தமரத்தை ஆகிய மரப்பெயர்கள் தொனிக்கும்படிப் பாடியுள்ள நயம் காண்க. அந்தரம் - மேல்.

406. செம்மாடம் - சிவந்த உயர்நிலை. மாடு - பக்கம். சரண் - அடைக்கலம்.

407. விது மதனன்-சந்திரனைத் துணையாக் கொண்ட காமன். தாதை - தன் தந்தையாய கண்ணன். தூர்த்தன் - பரத்தையாளன். பதுமமனை - தாமரை இல்லம். தாய் - திருமகள். மால் - காம மயக்கம். மோகம் - காதல். பிணை - பின்னை - பிறகு.

410. பசந்தாள் - பசப்பு நிறம் பெற்றாள். காம வருத்தச் செயல்களைக் கூறியமை காண்க.

411. செங்குவளை - செவ்வரி யுடைய கண்கள். ஒழுக்கும் - சொரியும். தெண்ணீர் - கண்ணீர். சங்கு வளை - கையில் அணிந்த சங்கினால் ஆகிய வளை. ஒழுக - நழுவி விழ.

412. பாரீ ரெனவிரங்கிப் பைந்தொடியார் கண்பனித்து
வாரீர் முறையிடுவோ மாற்கென்றார்—நாரணரே

413. யித்திருவின் கண்முத் திரையாத போதுமக்கு
நித்திலப்பத் தாய நிரம்பாதோ—சித்திரமின்

414. மெய்த்தமணி வீழாமல் விந்திகை விந்திகையாய்
வைத்தகரு கூலம் வளராதோ—பொய்த்தவிடை

415. நற்கலையை வாங்காம ஞட்டந் துயிலாதோ
பொற்கலையின் பெட்டி பொலியாதோ—நிற்கப் (415)

416. பகட்டி லிவளறிவும் பண்பும் பறித்தீர்
புகட்டிவைத்த தெந்தப் புதையோ—தகட்டுமணி

417. யாடகச்சங் காழி யருளென்றீ ரிவ்வெறுங்கை
வேடனெனும் பேரினிமேல் வேண்டாவோ—வாடையிலே

418. யிந்தப் பறிபறித்தா லெங்கலிய ஞர்பறிக்கு
மந்தப் பறிமீண்ட தாகுமோ—முந்துவனந்

---

412. கண் பனித்து - கண்ணீர்த் துளி கொண்டு.

413. கண்முத்து - கண்ணீர். நித்திலம் - முத்து. பத்தாயம் - பெரும் பேழை. சித்திரமின் - அழகிய மின்னற்கொடி போன்ற பெண். பி - ம். நித்தறபத்தாயம்.

414. மணி - கண்ணீர்த்துளி. விந்திகை - குவியல். இது "விருந்த" என்ற வடசொல் திரிபு. கருகூலம்=பொக்கிஷம் - உண்டியல்.

415. கலை - ஆடை. நாட்டம் - கண்கள். பொற்கலை - பீதாம்பரம்.

416. பகட்டு - தோற்றம். புதை - உட்பொருள். தகட்டு மணி - பட்டை யிட்ட மணி.

417. ஆடகம் - பொன். சங்காழி - வளையும் கணையாழியும். "வெறுங் கை வேடன்" என்ற அருமைத் திருப்பெயர் திருவேங்கட முடையானுக்கு அமைந்தமை இந்நூலுள் 42, 391-ஆம் கண்ணிகளிலும் காட்டியுள்ளது. வாடை - வடக்கினின்று வீசும் பனிக்காற்று,

418. கலியனர் - திருமங்கை யாழ்வார். அந்தப் பறி - வேடுபறி என்ற விழா.

"ஈதோ திருவா சீதோ மணங்கொல்லை
யீதோ வெழிலாலி யென்னுமூ—ரீதோதான்
வெட்டுங் கலியன்வேல் வெற்றிநெடு மாலையெழுத்
தெட்டும் பறித்த விடம்."

என்ற மணவாள மாமுனிகள் திருவாக்குக் காண்க.

419. தங்குமொரு பெண்பழியைத் தான்செலுத்திக் கொண்டரே
யிங்குமொரு பெண்பழிமே லெண்ணமோ—நங்கொடியைத்

420. தேற்றிவிட ரென்றவருந் தெண்டனிட்டார் கண்ணருளா
லாற்றி யவரு மயல்கன்றார்—வேற்றொருத்தி (420)

## அரிவை.

421. காவற் கடவுளையென் கண்பாயிற் பின்னைமட
லேவற் கரிவை யெனுமரிவை—மாவிற்கை

422. மங்கைபங்க ஞலே வளைபடா வேலேந்துந்
துங்க மகனாலே துளைபடா—வெங்கண்

423. மலைகுனிய நின்றபிரான் வந்தாலு மிந்த
முலைகுனியா வென்ற முலையா—ளலைகடலை

424. யக்கடலி னஞ்சை யமுதுண்ட முக்கணனை
முக்கணன்கைம் மானை முரண்மானைப்—புக்கவிடந்

425. தேடிப் பொருதுஞ் சிலீமுகத்தைச் செம்முகத்தே
கூடிக் கொளச்செய்த கூர்விழியாள்—பாடலிலே (425)

---

419. வனம் தங்குமொரு பெண் பழி - சீதா பிராட்டியார் பழி. கொடி - பெண் என்றபடி.

421. காவற் கடவுள் - திருமால். கண்பாயின் - விழியிடத்துப் பாய்ந்தால். மடல் ஏவற்கு - மடல் ஏறுதல் ஆகிய செயலுக்கு. அரிவை - பனை மடலினை அரிந்து வைப்பாய். ஆண் பாலார் மடலேறுதல் வழக்கு.

‘மடன்மா கூறு மிடனுமா ருண்டே’ —தொல்காப்பியம்.

423. மங்கை பங்கன் - உமையைத் திருப்பாகத்து உடைய சிவன். வேலேந்துந் துங்க மகன் - வேலாயுதம் தாங்கும் சிறந்த முருகன். சிவன் வில்லாக வளைத்தது மேருமலை : முருகன் வேலால் துளைத்தது கிரௌஞ்ச மலை. திருமால் எழுந்தருளிக் குனியச் செய்தது திருவேங்கட மலை - இவற்றுக்கு மேம்பாடுடையவை இவ்வரிவையின் முலைகள் என்றபடி.

424. முக்கணன் - சிவன். சிவன் கையில் உள்ள மானை மாறுபட்டுள்ள மாரீச மானை.

425. பொருதும் - சாய்க்கும். சிலீமுகம் - அம்பு. அரிவையின் கூரிய விழி - கடலையும், கடலின் எழுந்த நஞ்சையும், சிவனையும், சிவன் கைம் மானை உறழ்ந்த மானையும், அதனைச் சாய்த்த அம்பினையும் ஒருங்கு காட்டினாற் போன்ற விழியாள் என்றார்.

426. கற்கம்து ரிக்கநடை காட்டுஞ் சடகோபன்
நற்கவிதை போலு நடையினள்—பொற்குடுமி

427. நங்கனக வேங்கடத்து நாளும் பழுத்தபலாச்
செங்கனியுஞ் செங்கொளிஞ் சிக்கனியும்—பொங்கிரத

428. மாங்கனியு முந்திரிகை வண்கனியுஞ் செவ்வரம்பைத்
தேங்கனியு மென்னச் சிறப்பெய்தி—நாங்கனிந்து

429. சொற்கதலத் தாரமுதைச் சொன்னலு மிக்கோதை
சொற்கதல வீடென்ற சொல்லினள்—சிற்கமலை

430. யுல்லாச வேங்கடவற் கொப்பாரு மிக்காரு
மில்லாது போலுநடு வில்லாதாள்—சல்லாப (430)

431. மாடக வீணை மதுரவிரற் செங்கனிவாய்ப்
பாடகி வந்து பணிந்தாளை—யேடிநின்

432. பண்ணுக் கழகாம் பதம்போலே பார்க்குமிரு
கண்ணுக் கழகேது காட்டென்றாள்—பெண்ணாசே

---

426. தமிழ்ப் பாட்டுக்களுள் கற்றற்கும் இன்சுவை கொள்ளற்கும் நன்னடை காட்டும் ஸ்ரீ நம்மாழ்வாரின் திருவாய்மொழி நன்னடையினை ஒப்புமை காட்டினர். இது கம்ப நாடரின் கவிதை நினைந்து கூறியதாம்.

"பூவரு மழலை யன்னம் புனைமடப் பிடியென் றின்ன
தேவரு மருளத் தக்க செலவின வெனினுந் தேறேன்
பாவருங் கிழமைத் தொன்மைப் பருணிதர் தொகுத்த பத்தி
நாவருங் கிளவிச் செய்ய நடைவரு நடைய ணல்லோய்"

(நாடவிட்ட படலம்) என்ற பாடலை நோக்குக. குடுமி—சிகரம்.

427. கனகம் - பொன். இரதம் - சாறு.

428. செவ்வரம்பை - செவ்வாழை. கனிந்து - கனிவு கொண்டு.

429. சொற்க தலத்தார் - தேவ ருலகத்தவர். கோதை - பெண். சொற்கு அது ஈடு அல்ல என்ற சொல்லினள் - சொல்லுக்கு அந்த அமிர்தம் ஒப்பு அல்ல எனற்கு உரிய மேம்பாடுள்ள சொற் பேசுபவள். சிற்கமலை - ஞான வடிவினள் ஆகிய திருமகள்.

430. உல்லாசம் - களிப்பு. வேங்கடவற்கு ஒப்பாரும் மிக்காரும் இன்மை இங்கு தெரிவை இடையின்மைக்கு ஒப்புமை. நடு - இடை. சல்லாபம் - உரையாடல்.

431. மாடகம் - வீணையின் முறுக்காணி. பாடகி - பாடுபவள்.

432. பண் - இசை. பதம் - இசைப்பாட்டு.

433. வேறு மினிக்காண வேண்டுமோ வேங்கடத்தை
நூறு முகயாக நோக்காயோ—பேறுடையான்
434. செந்திருவின் வேள்வித் திருமுளையும் பாலிகையு
மந்தவிழிக் கானந்த மல்லவோ—முந்தநீ
435. யிக்கிரியிற் சேனைக் கிறையை யிறைஞ்சாயோ
சக்கரவேந் தன்பவனி தாழாயோ—மிக்ககொடி (435)
436. யேற்றங்கா ணாயோ யியற்சேட பீடத்துத்
தோற்றந்தான் போற்றித் துதியாயோ—நாற்றிசைகை
437. கூப்புந் திருவாசி கும்பிடா யோமுத்தின்
பூப்பந்தற் கோயில் புகழாயோ—காப்பவரு
438. மம்மான் றிருத்தோ ளறியாயோ வீதியிலே
நம்மானை நம்பிரா னண்ணாயோ—செம்மாந்த
439. செங்கதிரோன் மண்டலமுந் தேரோட்ட மும்பரியு
மிங்கிருந்து சேவித்தா யில்லையோ—கங்குற்
440. றிருவனந்தற் கெங்கிருந்தாய் தீர்த்தவா ரிக்கே
யரிவை முழுகிய நீரன்றோ—மருமலரின் (440)

---

433. நூறு முகமாக. பல பல வகையாக பி - ம். வேங்கடத்து நூறு முகமாயனேக்காயோ. இனி விழாநாள் சிறப்புக்கள்.

434. செந்திருவின் வேள்வி - திருமகள் திருக்கல்யாண யாகம். திருமுளையும் பாலிகையும் - அங்குரார்ப்பணமும் நவதானிய பாலிகையும்.

435. சேனைக் கிறை - விஷ்வக் சேனன். சக்கரவேந்தன் - சுதரிசனாழ்வார். பவனி - ஊர்வலம். பி - ம். சேணத்திறை.

436. கொடியேற்றம் - துவசாரோகணம். சேஷபீடம் - ஆதிசேஷன் இருக்கை. பெரியது, சிறியது ஆகிய ஊர்திகள் இரண்டும்.

437. திருவாசி - பிரபை வளையம். முத்துப் பந்தல் ஊர்தி.

438. அம்மான் திருத்தோள் - கருட அனும ஊர்திகள். ஆனை நம்பிரான்—திருக்கோவில் ஊர்திகள் ஆகிய யானை குதிரை இவற்றை நம்பிரான் எனப் பாராட்டிக் கூறுதல் வழக்கு. 'திருமங்கை யாழ்வார் கோயிலுக்கு நம்பிரானிலேறி யருளி'—என்ற கல்வெட்டுக் காண்க. (G T. 66.) குதிரை நம்பிரானேறி நடந்தருளி" அழகர்கிள்ளைவிடு தூது—152. சீவக சிந்தாமணி உரையில் நச்சினார்க்கினியர் குதிரையை நம்பிரான் என எழுதிக் காட்டினர் (2157). செம்மாந்த-களிப்புற்ற.

439. செங்கதிரோன் மண்டலம் - சூரியப் பிரபா வாகனம். தேரோட்டம் - தேர்த் திருநாள். பரி - குதிரை வாகனக் காட்சி.

440. திருவனந்தல் - திருக்கோயில் மூர்த்தியின் விடியற் காலைப் பள்ளியெழுச்சிச் சிறப்பு. தீர்த்த வாரி - திருவிழா முடிவில் மூர்த்திக்குச் செய்விக்கும் நீராட்டு.

441. வேள்விக் கொருநாள் விழித்திருந்தா யல்லேயோ
கேள்வி விடாயாற்றி கேளாயோ—வாழ்வுடனே

442. யுஞ்சற் றிருநா ளுறித்திருநா ளாழ்வார்கள்
செஞ்சொற் றிருநாள் செல்த்திருநாள்—கஞ்சமல

443. ரோடைத் திருநா ளுலாத்திருநா ணல்வசந்த
கோடைத் திருநாள் குறியாயோ—வேடிக்கை

444. யெல்லாம் பழகியறிந் தென்னைநீ கேட்பதென்னே
சொல்லா யிதுவுமொரு சூழ்ச்சியோ—நல்லாய்கா

445. ணென்ன வவளை யிரத்தினபீ டத்திருத்திச்
சொன்னவபி டேகஞ் சொரிவித்தாள்—பின்னை (445)

446. நினைவெடுத்துக் கொண்டா ணெடுமாலே யென்று
ளுனையலைப்ப தெந்தமா லென்று—ளனகா

447. கனக்குமக மீனமே காத்தருளா யென்று
ளெனக்குமக மீனமே யென்றாள்—சினக்கும்

448. பழுதுகைக்கு மாமையே பாரென்றாள் பார்த்தா
லெழுதுகைக்கு மாமையே யென்று—டொழுது

449. திருவரா கத்தரசே தெய்வமே யென்று
ளிருவரா கத்தகுமே யென்று—ளருளாய்

---

441. மருமலரின் வேள்வி - புஷ்பயாகம் என்ற விழா. விடாயாற்றி - பெருந் திருவிழாவுக்குப் பின்பு மூர்த்திக்குக் கோயிலுக்குள் இளைப்பாறல் ஆக நடக்கும் விழா.

442. உஞ்சல் - ஊஞ்சல். உறி - உறியடித் திருநாள். ஆழ்வார்கள் செஞ்சொல் திருநாள் - திரு அத்யயனோத்சவம். கஞ்ச மலர் - தாமரைப் பூ.

443. ஓடை - வாய்க்கால். உலா - ஊர்வலம். வசந்தம் - இளவேனில். இவை பற்றி நடக்கும் விழாக்கள்.

445. சொன்ன அபிடேகம் - பொன் நீராட்டு.

446. அலைப்பது - வருத்துவது. மால் - விஷ்ணு, மயக்கம் (சிலேடை) அனகா - குற்றமில்லாய்! விளி.

447. மக மீனமே - பெரிய மத்ஸ்யாவதாரனே! எனக்கும் அகம் ஈனமே - எனக்கும் நெஞ்சம் இழிவு ஆயதே!

448. பழுதுகைக்கும் ஆமையே - குற்றம் தீர்க்கும் கூர்மாவதாரனே! வடிவு எழுதுகைக்கும் மாமையே. மாமை - மகளிர் மேனிப் பசப்பு நிறம்.

449. வராகத்து அரசே - ஆதி வராகாவதாரனே! இருவர் ஆகத் தகுமே - காதல் ஒன்றுபாடு இன்றி இருவர் வேறாகத் தகுமோ?

450. நவமரசிங் காவென்று ஞணிநீ நல்கு
மிவனரசிங் காகொடிதே யென்றுண் — டவுனத் (450)

451. தனிவா மனனே சரணென்று ளென்பா
லினிவா மனனேயிங் கென்றுள் — குனிவிற்

452. பரவுமழு வாளானே பாரென்றுள் பார்த்தா
லிரவுமழு வாளானே னென்றுள் — சுருதி

453. குறிக்கு மிராமனே கூடென்று ளென்பா
லெறிக்கு மிராமனே யென்று — ளறிக்கை

454. திடங்கொள் பலபத்திரா சேரென்று ளந்தி
யிடங்கொள் பலபத்திரா வென்று — டடங்கருணே

455. செய்துகிட்டி ணுவிரகந் தீரென்று ளுன்மதலை
யெய்துகிட்டி ணனே யிதோவென்றுள் — வெய்துயிர்த்தா (455)

456. ளாங்குதிரை யேயென்று ளாசைகொண்ட மாதரார்க்
கோங்குதிரை யேயொறுப் பென்றுள் — வேங்கடத்தி

457. ளுதிக் கருமுகிலே யாகத் தணைப்பேனே
சோதிக் கருமுகிலே சொல்லென்று — ணீதிக்

---

450. நீ நல்கும் இவன் - நீ பெற்ற இம் மன்மதன். அரசு இங்கு ஆ கொடிதே - அவன் ஆட்சி இங்கு ஓ கொடிது என்றுள்.

451. என்பால் இனி மனனே வா - என்று சொன் மாற்றுக: இது தன்னை விட்டு நீங்கிப் பெருமாளிடம் சென்ற நெஞ்சை அழைத்தபடி.

452. மழுவாளன் - பரசுராமன். இரவும் அழுவாள் ஆனேன் - இராப் பொழுதும் கைமிக்க காமத்தால் அழுகின்றவள் ஆயினேன்.

453. சுருதி குறிக்கு மிராமனே - வேதம் கூறும் இராமனே. என்பால் இரா மன் எறிக்கும் - என்னிடம் இராப் போதின் அரசு ஆகிய சந்திரன் நிலா எறித்துத் துயர் தருவான்.

454. பலபத்திரர் - பலராமன். அந்தி - சந்தியாகாலம். பல பத்து இரா.

455. கிட்டிணு - கண்ணனே! விரகம் - காமத்துயர். உன் மதலை - உன் பிள்ளையாய காமன். இதோ எய்து கிட்டினனே - இதோ அம்புவிட்டு நெருங்கினனே. வெய்துயிர்த்தாள் - பெரு மூச்சு விட்டாள்.

456. குதிரையே - கல்கி யவதாரனே. ஓங்கு திரையே ஒறுப்பு - பெருகும் கடல் அலைகள் துன்பம் தருவன என்றபடி. 447-456. கண்ணி களுள் தசாவதாரப் பெயர்கள் வந்தமை காண்க.

457. ஆகம் - மார்பு. கருமுகிலே! - மேகத்தை நோக்கிய விளி.

458. சூற்கெவுளி பார்த்தாள் குலவுநிலா மெய்த்தைக்
விரற்கெவுளி யென்றாள் வெருண்டா—ளுரற்கயிறு

459. கட்டினன் கைக்குளெனைக் கட்டின னென்றணைத்தாள்
கட்டின னுன்னியதைக் காட்டென்றாள்—கிட்டின

460. ளூடல் வறிதே யுரைத்தாள் சுழித்தசுழிக்
கூடலுடன் சங்கத்தைக் கூட்டினாள்—பாடி (460)

461. நகைத்தாள் குறத்தி நவிலென்றாள் வாடித்
திகைத்தாள் புழுகோடத் தீர்ந்தாள்—பகைத்தமத

462. னத்திர சாலையென வஞ்சாமற் பூஞ்சோலைப்
பத்து மரமும் பரிசித்தா—ளத்தலத்திற்

463. கோல மணிக்குருந்தின் கோடெல்லாஞ் சோதித்தா
ளாலி னிலைகளெல்லா மாராய்ந்தா—ஞாலி

---

458. கெவுளி - பல்லிசொல் கேட்டல். விரற் கெவுளி - விரற் சொடக்கு.

459. உரற்கயிறு கட்டினன் - தாமோதரன். கண்ணனுக்கு இப் பெயர். உளைந்தாள் - வருந்தினாள். கிட்டினள் - அணுகினாள்.

460. ஊடல் - பிணக்கு. வறிதே - சும்மா. சுழிக்கூடல் - கூடல் இழைத்தல். காமத்துயர் உற்ற மகளிர் தம் காதலர் தம்மைக் கூடுதற்கு வருவரோ என்று நிமித்தம் பார்க்குமாறு மணலில் தம் விரலால் சுற்றுக் கீற்றுகள் கீறிப் பார்த்தல் - ஆண்டாள் திருப்பாடல் "கூடுமாகில் நீ கூடிடு கூடலே", காண்க. சங்கத்தைக் கூட்டினாள் - கூடல் சுழிகளுடன் கையி னின்று கழன்று விழும் வளையல்களையும் சேர்த்தாள்.

461. குறத்திகளிடம் குறி கேட்டலும் வழக்கு. புழுகோட - புழுகு அணிய. புழுகு அணியக் காமத்துயர் தணியும் என்ப.

462. அத்திர சாலை - ஆயுத சாலை - (அத்திரம்—அம்பு). பூஞ்சோலைப் பத்து மரம் - இவை மகளிரால் மலரும் மரம் எனப்படும்.

"ஏடவிழ் மகிழ்சு வைக்க வெழிற்பாலை நண்பு கூடப்
பாடல நிந்திக் கத்தேம் படிமுல்லை நகைக்கப் புன்னை
ஆடநீள் குராவ ணைக்க வசோகுதைத் திடவா சந்தி
பாடமாப் பார்க்க வார்சண் பகநிழல் படத்த ளிர்க்கும்."

என்ற சூடாமணி நிகண்டுச் செய்யுள் காண்க. இதன்படி, மகிழ், பாலை, பாதிரி, முல்லை, புன்னை, குரா, அசோகு, குருக்கத்தி, மா, சண்பகம் ஆகிய பத்து மரங்களும் மகளிர் இன்பச் செயலால் மலரும் என்பது மரபு.

463. குருந்து - கண்ணன் ஏறி விளையாடியது ஆதலால் அதனை நோக்கினாள். கோடு - கொம்பு. ஆல் - ஆலமரம். அதன் இலையில் அவன் கண் வளர்ந்தானாதலின் அதனைப் பார்த்தாள்.

464. லணைத்த குருகையிறைக் கன்றிநிழ லீயாப்
பணைத்தபுளி நற்கவட்டைப் பார்த்தா—லிணைக்கயலா

465. லோராசைக் கண்டா ளுயர்வேங் கடத்தரசே
பாராசே வானோர் பதியாசே—பேராசே (465)

466. யென்னரசே யென்றென் றிறைஞ்சினா ளிந்தமா
நின்னரசே யென்றுரை நிந்தித்தாண்—முன்னே

467. திருமலையான் வேங்கடத்தான் சேட கிரியான்
றரும விடபா சலத்தான்—கருடகிரி

468. நின்று னடந்தா னெடுந்தே ரெதிரோடிச்
சென்றாள் வணங்கிச் சிணுங்கினாண்— மன்றாடி

469. வந்தரிவை நின்ற மயலு மனத்துயரு
மந்தரி யாமி யறியானோ—சந்ததமு

470. மெள்ளுக்கு ளெண்ணெய்போ லெங்குங் கலந்திருப்பா
னுள்ளத்தி னுள்ள துணரானோ—வள்ளலெனத் (470)

471. தஞ்ச வுலகனைத்துந் தானே பரிப்பானோர்
வஞ்சி தனையாள மாட்டானோ—கஞ்ச

472. மதுர முறுவல் வழங்கியருள் செய்தா
னுதவி யதிற்பிறந்த தொன்றோ—விதுவொடிளங்

473. காற்றுக் குத் தன்னணையாய்க் கார்க்கடற்குத் தன்கணையாய்க்
கூற்றுக் குயிற்குத்தன் கோலமாய்த்— தூற்றிவருந்

---

464. குருகை யிறை - திருக்குருகூர்த் தலைவர் ஆகிய நம்மாழ்வார். அவர்க்கு அன்றி நிழல் தராதது அத்தலத்துத் திருப் புளிய மரம். பணைத்த - பருத்த. கவடு - கொம்பு. இங்கும் திருப்புளி யடிக்கீழ் திருவேங்கடமுடையான் எழுந்தருளியமை காண்க. இணைக் கயலால் - இரண்டு கண்களாலும்.

465. அரசு - திருவேங்கட முடையான்.

468. மன்றாடி - இரங்கி. மயல் - காம மயக்கம். அந்தரியாமி - அனைத்து உயிரிலும் இருப்போன்.

471. தஞ்சம் - எளிமை. பரிப்பான் - தாங்குவோன். வஞ்சி - பெண். கஞ்சம் - தாமரை.

472. முறுவல் - சிரிப்பு. விது - சந்திரன்.

473. இளங் காற்று - தென்றல். தன் அணை - தன் படுக்கை ஆகிய பாம்பு. கணை - அம்பு. கூற்றுக் குயில் - எமனை ஒத்த குயில். தன் கோலம் - மேக நிறம்.

474. தாயருக்குஞ் சேமணிக்குந் தானேயாய்த் தன்மகற்கு
நேயத் தொருபாக னெற்றியாய்த்—தூய

475. நறுநுதலா சைப்பிணிக்கு நன்மருந்து மான
நறைமணித்தே ருங்கடந்த தப்பாற்—பிறகொருத்தி (475)

## தெரிவை.

476. மாதுரிய விற்கை மதனிரதி தேவியைநீ
யேது தெரிவை யெனுந்தெரிவை—காதற்

477. குளிகை யதிசுரத கோஷா கலப்பெண்
பளித சுகந்தரச பாகந்—தெளிதே

478. னமுத லகரிபா மானந்த வெள்ளங்
குமுத சகாயநிறை கோலஞ்—சுமுக

479. மனோகரசஞ் சாரி வசீகரசஞ் சீவி
விநோதவலங் கார விபூதி—கனோபலவின்

---

474. தூற்றிவரும் தாயர் - பழிகூறும் பெண்டிர். சேமணி - பசுக்களின் கழுத்துமணி. தன் மகன் - காமன். நேயத்து ஒரு பாகன். அன்புடன் தன்மேனியில் ஒருபாகத்துத் தங்கிய சிவன். தென்றல், கடல், குயில், பழிகூறும் பெண்டிர், ஆன் கழுத்துமணி, காமன் இவ்வனைத்தாலும் காமத் துயர் கொண்டமை ஒழிதற்குத் தனித்தனிப் பகைப் பொருள்கள் ஆகத் தேரும் ஆயிற்று என்றார். தென்றலுக்குப் பாம்பும், கடலுக்கு இராமன் அம்பும், குயிலுக்கு மழையும், பெண்டிர்க்கும் பசுக்களுக்கும் கண்ணனும், காமனுக்குச் சிவன் நெற்றிக் கண்ணும் எதிராய் அமைந்தமை கண்டு கொள்க.

475. ஆசைப் பிணி - காம நோய்.

476. மாதுரிய வில் - இனிமை யுடைய கரும்பு வில். மதன் - மன்மதன். இரதி - அவன் மனைவி. தெரிவை - அறிவாய்.

477. குளிகை - மருந்து உருண்டை. அதிசுரதம் - மிக்க கலவி. பளிதம் - கர்ப்பூரம். சுகந்தம் - நறுமணம். ரசபாகம் - சுவைப் பக்குவம்.

478. அமுத லகரி - அமிர்த வெள்ளம். குமுத சகாயம் - குவளைப்பூவுக்கு உதவியாய சந்திரன். கோலம் - அழகு.

479. மனோகர சஞ்சாரி - நெஞ்சிற்கு இனிமை தரும் நல்நடையாள். வசீகர சஞ்சீவி - தன்வய மாக்கும் மருந்து. அலங்கார விபூதி - அழகுச் செல்வம். கனோபலம் - ஆலங்கட்டி.

480. சாபகன ரூப சலாபமயிற் சந்த்ரகுடைப்
பூபரண ஞபாணப் பொற்றேவி—சோபனத்தின் (480)

481. பண்டாரி யண்டம் பதிஞ்லு நின்றளந்து
கொண்டான் குழைந்தனைய கொண்டையாள்—வெண்டிரையிற்

482. சேமவே தம்பறித்த சேலைப்போ லேமிளிர்ந்து
காமவே தம்பறித்த கண்ணிஞ—ளேமநிறச்

483. சூதுடனே சூது துவக்கவோ மாமுகுளப்
போதுடனே வாது புரியவோ—வாது

484. மலையுடனே மற்பொரவோ வன்னவனத் தென்னங்
குலையிளநீர்க் கண்களிற்குத் தற்கோ—தலையெடுத்து

485. வாரணத்தை நேரேற்று வாரணத்துக் கென்னவோ
பூரணகும் பத்தைப் புடைக்கவோ—வீரமணிக் (485)

486. தாளமெல்லா மாளவே சாடுவிக்க வோசக்ர
வாளமெல்லா மீள வளரவோ—வேளின்

487. முடிக்கு முடியிடவோ முண்டகனண் டத்தை
யிடிக்கு முபாய மிடவோ —படிக்குளெனக்

488. கிட்டிக் கதித்துக் கிளைத்துத் திளைத்தாரங்
கொட்டிப் புளகித்துக் கூறிட்டுப்—பட்டுக்கச்

---

480. சாபம் - வில். கனம் - மேகம். சலாபம் - சரசப் பேச்சு. பூ பரணன் - பூ தாங்குவோன் : காமன். பொற்றேவி - இரதி. சோபனம் - மங்களம்.

481. பண்டாரி - பொக்கிஷம். அண்டம் அளந்து கொண்டான் - திருமால். திரை - கடல்.

482. சேமம் - காப்பு. சேல் - மீன். மிளிர்ந்து - மின்னி. காம வேதம் - காம சாஸ்திரம். ஏமம் - பொன்.

483. சூது - சூதாட்டக் காய். சூது - போர். முகுளம் - அரும்பு.

484. மல் - கைச்சண்டை. வன்னம் - அழகு. வனம் - தோப்பு.

485. வாரணம் - யானை. வா ரணத்துக்கு - வருக சண்டைக்கு. பூரண கும்பம் - நீர் நிறைந்த கலசம்.

486. தாளம் வடிவுக்கு உவமை. சாடுவிக்க - அடித்தொழிக்க. சக்கர வாளம் - உலகு சூழ் பெருமலை. வேள் - மன்மதன்.

487. முடி - கிரீடம். முண்டகன் - தாமரையில் வழும் பிரமன். படி - நிலம்.

488. ஆரம் - முத்து. புளகித்து - சிலிர்த்து. கச்சு - மார்புப் பட்டிகை.

489. சொப்பித் தொப்பற்றுக் கப்புற்றுச் செப்பச் செப்பச்
செப்பொத்துப் பற்பத்தைச் சிட்சித்துக்—கப்பக்கற்

490. பூரத்தைச் சாரித்துப் பூரித்திட் டாரித்துப்
பாரப்பொற் பாரத்தைப் பாரித்துச்—சீரித்துக்

491. கண்ணன் விழிக்குணமுங் கம்பிற் புடைப்புமவன்
வண்ண மணியாழி வட்டணிப்பு— நண்ணுபெருங்

492. கொங்கையாள் பங்கயத்தின் கொங்கையா ளாகாய
கங்கையா ளுந்திக் கனஞ்சுழியாண்—மங்கையரைச்

493. சங்கஞ் சிறந்தோங்கச் சக்கரமங் கேபொலியப்
பங்கயங்கள் காட்டும் படிதோன்றப்—பொங்கரவத்

494. தாடவே நன்று யலங்கரித்த நன்னீல
வோடை வடமலைமே லுண்டன்றே—யாடையிள

495. நீராட மைத்தகழு நீராட வென்னுடனே
நீராட வாரீரோ நீரென்றாள்—காரிகையே

496. யந்நீ ருனக்கல்லா தார்க்குவச மென்றுரைத்தார்
சொன்னீ ரறிந்தெனவே சொல்லாடி—நன்னுதலீ

497. ரத்துளவோன் பற்றி யணையாத போதெனது
குத்து முலைகள் குடமாமோ—சுத்தநிறப்

---

489. ஒப்பித்து - புனைந்து. கப்புற்று - கவிந்து. செப்பச் செப்ப - நன்று ஆக. செப்பு - கலசம். பற்பம் - தாமரை. வல்லிசை வண்ணம் காண்க.

490. கற்பூரம் - பச்சைக் கற்பூரம். சாரித்து - கீழ் விழச் செய்து. பூரித்து - விம்மி. ஆரித்து - ஒலித்து. பாரம் - பருமை. பொற்பு ஆரம் - அழகிய மாலை. பாரித்து - தாங்கி. நெட்டிசை வண்ணம் வந்தது.

491. கண்ணன் விழிக்குணம் - கள்ளம். கம்பு - சங்கு. ஆழி - சக்கரம். வட்டணிப்பு - வட்டத் தன்மை. கள்ளமும், புடைப்பும், வட்டணிப்பும் உடைய என்றபடி.

492. பங்கயத்தின் கொங்கை - தாமரைத் தேனினை. ஆள் - ஆளும். ஆகாய கங்கை - தீர்த்தம். உந்தி - நீர்ச்சுழி.

493. சங்கம் - சங்குகள். சக்கரம் - சக்கரவாகம். அரவம் - சத்தம்.

494. நீல ஓடை - நீலப் பூ நிரம்பிய ஓடை. சங்கம், சக்கரம், அரவத் தாடல் இவற்றால் திருமாலைக் குறிப்பாற் காட்டியது காண்க.

495. இளநீர் - கொங்கை (குறிப்பு). மைத்த - கருமையான.

497. அத்துளவோன் - அந்தத் துளசி மாலையுடையான். சுத்த நிறம் - வெண்மை.

498. பாமயிலின் மாமன் பயிலாத போதிந்தத்
தாம மணிக்கழுத்துச் சங்காமோ—பூமடந்தை
499. யாட்சி மகிண னகப்படா தேயிருந்தாற்
காட்சி விழிகள் கட்லாமோ — மாட்சிவனம்
500. புக்க சிலேமேகம் போற்ருத போதெனது
மிக்க புருவநுதல் வில்லாமோ—சிக்கெனவே (500)
501. வேத முழங்குதுளே வேணுநா தன்முனிந்தாற்
காத விருதோள் கழையாமோ—வோதுகதி
502. கல்கு மாவணேயி னுதனரு கிலேயே
லல்கு லுவமை யாவாமோ—சொல்கடவு
503. ளெங்கோன்பி லேபுவப்ப னெங்கோன்பி லேயணேப்ப
னென்னே வகற்றுவகை யென்னேதா—னென்னே
504. டுரையீர் திலத முரைப்பீ ரிருந்து
கரையீர் களபங் கரைப்பீர்—விரகந்
505. தெளியீர் பனிநீர் தெளிப்பீர் கலந்தே
யளியீர் துயரை யளிப்பீர்—துளவுகொடு (505)
506. வாரீர் கடும்புழுகை வார்ப்பீர்சந் தாயொன்றும்
நேரீர் பெருந்தூறு நேர்விப்பீ—ராரிருந்து
507. மேதா மடற்பெறுவ தேதா மதமென்ன
மாதே வனிதையே வஞ்சியே—கோதையே

---

498. பாமயில் - பாடல் தெய்வம் - சரசுவதி. அவள் மாமன் கண்ணன். தாமம் - மாலே. கழுத்துக்குச் சங்கு ஒப்புக் கூறல் மரபு.

499. மகிணன் - கணவன். அகப்படாதே - உள் தங்காமல்.

500. வனம் புக்க சிலே மேகம் - இராமன். புருவத்துக்கு வில் ஒப்புரைத்தல் மரபு.

501. துளேவேணு - ஏழு சுரத்துளேகளுடைய புல்லாங் குழல். கழை - மூங்கில்.

503. நோன்பு - விரதம். நோவு - துயர். அகற்று வகை - நீக்கும் வழி.

504. திலதம் உரைப்பீர் - நெற்றிப் பொட்டிட இழைப்பீர். கரையீர் - சொல்லீ மாட்டீர். களபம் கரைப்பீர் - கலவைச் சந்தனம் சேர்ப்பீர்.

505. விரகம் தெளியீர் - நோய் தெளியச் செய்ய மாட்டீர். பனி நீர் தெளிப்பீர் - பனி நீரைச் சொரிவீர். துளவு - துளசி.

506. வாரீர் - வரமாட்டீர். புழுகை வார்ப்பீர் - புனுகு பூசுவீர். சந்து - தூது. தூறு - பழி. முரண்வினே மொழிந்தமை காண்க.

507. மடல் - பனே மடலேற்றம். பெண்பாலார் மடல் கூறுதல் உண்டு.

508. மின்னே மணியே வெருவாதே நேசித்தா
ரின்னே வருவா ரெனுமெல்லை—பொன்னே
509. ருரத்தா னரங்கத்தா னூரகத்தான் கண்ண
புரத்தான் குடந்தைப் புரியான்—திருத்தெற்றி
510. யம்பலத்தான் புல்லணையா னாய்ப்பாடி யான்கச்சி
வெம்பதியான் சீராம விண்ணகரா—னம்புட் (510)
511. குழியா னயோத்தியான் கோவற் பதியான்
கழிவேலை யான்பா டகத்தான்—மழிசையான்
512. சித்திரகூ டத்தான் திருப்பதியா னெவ்வுளான்
மெய்த்திருவை குந்தத்தான் வெஃகாவான்—புத்தூரா
513. னந்திபுர விண்ணகரா னைகையா னங்கூரான்
சந்த வனந்த சயனத்தா—னிந்தளூர்
514. புள்ளம்பூ துாரான் புலியூரா னலியான்
வெள்ளக் குளத்தினன் வெள்ளறையான்—வள்ளற்
515. குறுங் குடியான் கண்ணங் குடியா னழுந்து
ருறந்தைநறை யூராத னூரான்—சிறந்ததிரு (515)
516. முட்டத்தா னயேனை முட்டத்தான் காத்தருளு
மிட்டத்தான் வேங்கடத்தி லெம்பிரான்—சிட்டன்
517. வரத னலர்மேனன் மங்கைமண வாள
னிரதந் தனிலே யெதிர்ந்தான்—கருதி ✓
518. நினைத்திருந்த காந்தனெதிர் நின்று லவன்முன்
பினைத்தெளிந்து பேசுமதே பெண்மை—யெனத்தொழுது

---

509. பொன்னேர் உரத்தான் - திருமகள் அமர்ந்த திருமார்பன். இக் கண்ணி முதல் திருமால் திருப்பதிகள் கூறப்படுவது காண்க.

"அரங்கங் குடந்தை குருகூர் குறுங்குடி யட்டபுய
கரங்கண்ண மங்கை நறையூர் கடன்மல்லை கச்சிகண்ண
புரங்கண்டி யூர்தஞ்சை மாவிருஞ் சோலைபுல் லாணிமெய்யர்
தரங்கம் பரம பதம்வேங்க டேசற்குத் தானங்களே" — என்ற

திருவேங்கடத் தந்தாதிப் பாடலில் வந்தவாறு ஒப்பிடுக.

அரங்கம் - திருவரங்கம் பெரிய கோவில். ஊரகம் - கச்சிப் பதியது. திருக்கண்ணபுரம். குடந்தைப்புரி - கும்பகோணம்.

516. முட்டத்தான் - ஸ்ரீ முஷ்ணம் என்னும் திருப்பதி யிருப்பான். முட்ட - முழுதும். இட்டத்தான் - இஷ்டம் உடையான்.

518. காந்தன் - கணவன்.

519. மாமாரி யைத்தடுத்த வள்ளலே மன்மதன்றன்
பூமாரி யைத்தடுக்கப் போகாதோ—காமாரி

520. சந்தச் சிலையொடித்த தாட்டிக ரேயனங்க
னந்தச் சிலையொடித்தா லாகாதோ—சுந்தரரே

521. நாதக் கடலடைத்த நாதரே யென்கண்ணீ
ரோதக் கடலடைக்க வொண்ணாதோ—சீதையெனும்

522. பொன்னையசோ கச்சிறையிற் புல்காமன் மீட்டவரே
யென்னையசோ கம்பொருவ தெண்ணீரோ—மன்னிவரும்

523. பேருருவப் புள்ளைப் பிளந்தவரே யன்றிலெனுங்
காருருவப் புள்ளைக் கடியீரோ—சீரிமையோர்

524. காமரத்தைச் சாய்த்தவரே காமனுக்குப் பூப்பூத்த
மாமரத்தைச் சாய்த்துவிட மாட்டீரோ—தாமமுலை

525. யானை யழைத்தா லணுகீரோ வீதியிலே
தானை சரிந்தவளைத் தாங்கீரோ—மேனியெல்லாம்

526. பொற்பாவை யானவளைப் புல்லீரோ நீரணைய
நிற்பா ளிருப்பை நினையீரோ—சொற்பாவை

---

519. மாமாரி - பெரு மழை. பூமாரி - அம்பு மழை. காமாரி - காமனை வீழ்த்திய சிவன்.

520. சந்தச் சிலை - அழகிய வில். தாட்டிகர் - வலியர். அனங்கன் - காமன். அந்தச் சிலை - கரும்பு வில்.

521. நாதக் கடல் - ஒலி செய்யும் சமுத்திரம். ஓதம் - பெருக்கு.

522. அசோகச் சிறை - இலங்கையில் அசோக வனத்தில் சீதை இருந்த சிறை. அசோகம் பொருவது - காமன் அம்பு தாக்குவது.

523. புள்ளைப் பிளந்தவர் - பகாசுரன் புள் வடிவத்துடன் வர அவன் வாயைப் பிளந்தவன் கண்ணன். அன்றில் புள் - அன்றில் பறவை. அது சாம்பல் நிறத்தது ஆதலின் காருருவம் என்றார். தன்னொலியால் காமத்துயர் மிகுவிப்பது.

524. இமையோர் காமரம் - தேவருலக புஷ்ப தரு. காமன் கணைகளில் மாம்பூ ஒன்று ஆதலின் மாமரத்தைச் சாய்க்க வேண்டினள்.

525. ஆனை யழைத்த போதும், துரோபதி தானை பறிக்கப்பட்ட போதும் கண்ணன் விரைந்து போந்து காத்த செயல் நினைந்து கூறியமை காண்க.

526. பொற்பாவை - பொன்னாலாகிய பொம்மை. சொற்பாவை - திருப்பாவை என்ற பிரபந்தம்.

527. யந்தாதி பாடு மவள்சூடு மாலையைநீர்
தந்தாளீர் முத்தி தருந்தாளீர்—வந்தாளீர்
528. கொற்றவரே யென்றுள் கொடுத்தார் தொடைபெற்ற
சிற்றிடையா ணிற்கத் தெருவகன்றுர்—மற்றொருத்தி

## பேரிளம்பெண்.

529. கண்களெல்லா மானந்தக் கண்களாய்க் காமனுடன்
பெண்களெல்லாந் தெண்டனிடும் பேரிளம்பெண்—பண்களெல்லாஞ்
630. சொற்கலைக ளெல்லாந் துளவோன் மருகிக்குக்
கற்கவுபதேசிக்குங் கல்வியாள்—பொற்கொடியார் (530)
531. விஞ்சிப் பிழைக்கவொட்டார் மென்கலையாற் கட்டுவரென்
றஞ்சிக் குடிபோ மருமருங்காள்—பஞ்சமுகன்
532. பொன்றுஞ் சடத்தோரைப் போதித்தே தாருக
வென்றுந் துதிக்கு மிரண்டெழுத்துந்—தன்றுதை

---

527. அந்தாதி - ஈண்டு நாச்சியார் திருமொழி ஆகிய பிரபந்தம் என்ற பொருளில் மட்டும் வந்ததாகக் கொள்ளுக. ஆண்டாள் பாடியருளிய திருப்பாவையும் மற்றைப்பதிகங்களும் அந்தாதித் தொடையால் அமைந்தவை அல்ல. எனினும்

"அன்ன வயற்புதுவை யாண்டா ளரங்கர்க்குப்
பன்னு திருப்பாவைப் பல்பதியம்—இன்னிசையால்
பாடிக் கொடுத்தாள்நற் பாமாலை பூமாலை
சூடிக் கொடுத்தாளைச் சொல்லு".

என்ற முன்னோர் கருத்தினைத் தழுவித் தொடுத்த மாலை போலுதலின் 'அந்தாதி' என்றனர் போலும் இந் நூலாசிரியர்.

528. தொடை - பூ மாலை.

529. ஆனந்தக் கண் - இன்ப நோக்கு. தெண்டனிடும் - வணங்கும்.

530. பண்கள், கலைகள் இவற்றை. துளவோன் - துளசி மாலையான் ஆகிய திருமால். அவன் மருகி - கலை மகள்.

531. கலை - ஆடை. மருங்கு - இடுப்பு. பஞ்ச முகன் - ஐந்து முகங்களுடைய சிவன்.

532. பொன்றும் சடத்தோரை - இறக்கும் மனிதரை. இரண்டெழுத்து—"ராம" என்னும் இரண்டெழுத்துள்ள திருநாமம்.

"சம்ப நாட னுமைசெவி சாற்றுபூங்
கொம்ப னுடன் கொழுநனிராமப்பேர்
பம்ப நாடழைக் குங்கதை பாச்செய்த
கம்ப நாடன் கழறலை யிற்கொள்வாம்".

இத் தனியனில் சிவன் பார்வதிக்கு இராம நாமத்தை விஷ்ணு சஹஸ்ரநாம துல்யமாகக் கூறின செய்தி காண்க. தன் தாதை - தன் தந்தையாய இரணியன்.

533. பொங்குந் தறியைப் புடைக்குமுன் னேர்பிள்ளை
யெங்குந் தனைக்காட்டு மெட்டெழுத்துஞ் — செங்கண்ண
534. னன்புடையோர் நெற்றிக் கயனெழுதா வவ்வெழுத்துந்
தன்புடையோர் கிள்ளைக்குச் சாற்றுவாள்—பொன்புணரு
535. மொற்றை முதலை யுன துதரத் தோமென்று
மற்றை யிருவர் வளைந்ததோ—தெற்றுறியிற்
536. பாலருந்த வேண்டிப் பரமன் பவளவாய்
கோலி வளைத்த குடங்களோ—மேலுலகி
537. லீட்டியதா ளைப்பரவி னீதேவை குந்தமெனக்
காட்டியகை பார்க்கவருங் காட்சியோ—நாட்டிற்
538. பறிந்துசுரர் கற்பகத்தைப் பற்றியநாட் சாய்த்து
முறிந்ததிசைப் பாலர் முடியோ—செறிந்தகுண
539. ஞானச் சுடரிரங்கி நாளைவா வென்றநாண்
மானித்து நின்றான் வதனமோ—தானூர்

---

533. தறி - தூண். ஓர் பிள்ளை - பிரகலாதன். எட்டெழுத்து "ஓம் நமோ நாராயணாய" என்ற திருவஷ்டாக்ஷர மந்திரம்.

534. அவ்வெழுத்து - அரி என்பது. கிள்ளை-கிளி. பொன்-திருமகள்.

535. ஒற்றை முதல் - ஒப்பற்ற கடவுள் ஆகிய திருமால். உதரம் - வயிறு. மற்றை யிருவர் - பிரமன், சிவன். தெற்று உறி - பின்னிய உறி.

536. ஆய்ப்பாடியில் கண்ணன் பால் திருடுங்கால் செய்த செயல்.

538. சுரர் - தேவர். திசைப்பாலர் - எட்டுத் திக்குக் காவல் புரிவோர்.

539. ஞானச்சுடர் - இராமன். நாளை வா என்ற நாள் - இராவணனொடு இராமன் செய்த முதல் நாள் போரில் இராவணன் படைக் கலங்கள் இழந்து வீரம் தொலைந்து நின்ற போது இராமன் தழிஞ்சி முறையால் "நாளை வா" என்ற செய்தியும் பிறவும் கீழ்வரும் கம்பர் வாக்கால் அறிக.

"ஆளை யாவுனக் கமைந்தன மாருத மறைந்த
பூளை யாயின கண்டனை யின்றுபோய்ப் போர்க்கு
நாளை வரவென நல்கின னகிளங் கமுகின்
வாளை தாவுறு கோசல நாடுடை வள்ளல்".

"வாரணம் பொருத மார்பு மலையினை யெடுத்த தோளும்
தாரணி மவுலி பத்துஞ் சங்கரன் கொடுத்த வாளும்
நாரத முனிவற் கெல்லா நயம்பட வுரைத்த நாவும்
வீரமுங் களத்தே போட்டு வெறுங்கையோ டிலங்கை புக்கான்"

"மாதிர மெவையு நோக்கான் வளநகர் தன்னை நோக்கான்
காதலர் தம்மை நோக்கான் கடற்பெருஞ் சேனை நோக்கான்
தாதவிழ் கூந்தன் மாதர் தனித்தனி நோக்கத் தானோர்
பூதல மென்னு நங்கை தன்னையே நோக்கிப் போனான்",

மானித்து - மானம் கொண்டு. வதனம் - முகம்.

540. கொடிசாய்த்த மந்தரமோ கூறுமெனச் சற்றே
முடிசாய்த்து நின்ற முலையாள்—கடிசாயக்

541. குடகோ புரமுலைக்குங் கூந்தலுக்கு மாயோன்
சடகோப மன்றித் தகுமோ—நடகோபன்

542. மேல்வளையை நோக்கென்றீர் வீரத்தோள் சக்கரத்து
வால்வளைய லன்றி வயங்குமோ—கோல்வளையீர்

513. நாமத் திலத நமக்கன்றி நெற்றியின்மே
லேமத் திலத மிசையுமோ—காமிக்கு

544. மவ்வஞ் சனக்கோல மன்றியே வென்றிவிழிக்
கிவ்வஞ் சனக்கோல மேற்குமோ—செவ்விமலர்ப்

545. பொற்றகரத் தாற்பிடித்துப் புல்லவா வென்றாலு
முற்ற கடக முறுத்தாதோ—கொற்றவரி

546. னாட லருங்கதையு மாகமமுங் காதிலே
தோடிருந்தாற் கேட்கத் துலங்குமோ—சேடனெடும்

547. பொன்சிலம்பு நாமம் புனைந்தபோ தேதாளில்
வன்சிலம்பு பூண வழக்குண்டோ—முன்சிறிது

548. நாணாமற் செய்தே னயப்பிலெனப் பல்பணியும்
பூணா தழகெறிக்கும் பொற்பினா—ளாணாடுங்

549. காளரா குப்போற் கருகிமுது கிற்புரண்டு
நீள முடித்தமயிர் நின்றாடத்—தோளிற்

---

540. தான் ஊர் கொடி - கருடன். அவன் சாய்த்த மந்தர மலை. கடி - மணம்.

541. சடகோபம் - திருமால் திருவடிக் குறிகளை யுடையதாய்த் தொண்டர்களின் முடியிற் கவிக்கும் திருவடி நிலை. நடகோபன் - ஆடல் செய்யும் இடையன்.

542. வளை - சங்கு. வால் - வெண்மை. வயங்கும் - விளங்கும்.

543. திலதம் - நெற்றிப் பொட்டு. காமிக்கும் - காதல் செய்யும்.

544. அஞ்சனக் கோலம் - மைபோன்ற திருமேனி அழகு. இவ் வஞ்சன கோலம் - இந்தக் கண்ணிலிடும் மையின் அழகு.

545. பொற்ற - அழகிய. கடகம் - கைவளை.

546. கொற்றவர் - வெற்றியுடைய மால். ஆடல் அருங்கதை - திருவிளையாடல் கூறும் பாகவதம். ஆகமம் - பாஞ்சராத்திரம். தோடு - காதணி.

547. சிலம்பு - மலை. நாமம் - பெயர். தாள் - பாதங்கள். சிலம்பு - காலணி.

549. காளராகு - கரும் பாம்பு ஆகிய இராகு.

550. கடகமாய் வெண்கலையே காசந் துவளப்
படனமா மண்டபத்தின் பாங்கே—யடியார்கைத்

551. தாமரைப்பூ வன்னமெனச் சாமரைக்கா டோங்கவே
மாமணிச்சிங் காதனத்து வந்தேறித்—தேமறைக்குள்

552. வாழ்வான நற்பொருளை வாக்கினால் வாரிவடித்
தாழ்வார் திரட்டு மமுதத்தைச்—சூழ்வார்க்குச்

553. செப்ப வவரெல்லாந் தேமொழிநீ வல்லையேன்
முப்பொருளி லாரே முதலாவா—ரப்பொருளை

554. நீளவுரை யென்றார் நினைக்கலா மோபிறணா
யாளனுள்ள கற்புள்ளா ராலுங்—கேளா

555 மருவு மானயனொண் மாமலரா ளென்னும்
திருவமர்மெய்த் தேவ னெவனே—வெருவியே

556 மூலமென வன்றழைத்த மும்மதயா னைக்கெவனே
யோலமென வேயன் றுதவினான்—பாலொருவன்

557. கையிலிட்ட சாயக் கபாலந் தனையெவனே
யையமிட்டு நீக்கி யனுப்பினான்—வையகத்து

558. வாணனுயி ரைத்தாங்க வந்தான் றனையெவனே
தூணிவிசி கத்தாற் றுரத்தினான்—சேணுலகிற்

559. சென்றபா தங்கழுவுந் தீர்த்தந் தனையெவனே
யென்றுமொரு வன்முடியி லேற்றினா—னன்றொருவன்

---

550. வெண்கலை - வெள்ளாடை. ஏகாசம் - உத்தரீயம் : மேலாடை. படன மண்டபம் - பாராயண மண்டபம். பாங்கு - பக்கம்.

551. தாமரைப் பூ வன்ன மென - தாமரை மலரில் அமர்ந்த வெள்ளை அன்னப் பறவைகள் போல. சாமரைக் காடு - வெண்சாமரைத் தொகுதி.

552. நம்மாழ்வார் திருவாய் மொழி யாயிரமும் சாம வேதத்தின் சாரமாதலால் இப்பாராட்டு உளதாயிற்று. சூழ்வார்க்கு - சுற்றும் உள்ளவருக்கு.

553. முப்பொருள் - ஆக்கல் காக்கல் போக்கல் செய்யும் மூவர்.

554. ஆளன் - மணவாளன். கற்புள்ளார் - கற்புடைய மகளிர்.

556. கசேந்திரனைக் காத்த செய்தி. மும்மதம் - கன்னகபோல பீஜ மதநீர்.

557. சிவன் பிச்சை யொழித்த செய்தி. கபாலம் - தலையோடு.

558. வாணன் - வாணாசுரன். தூணி - அம்பறாத்தூணி. விசிகம் அம்பு. சிவன் தோற்று ஓடிய செய்தி.

559. கங்கைநீர் சிவன் முடியில் ஏற்ற செய்தி.

560. பொற்பாதந் தன்னிற் புனைந்த மலரெவனே
கற்பா யொருவன்முடி காண்பித்தா—னற்புதமாய்க் (560)

561. கல்லைவென்ற திண்புயத்துக் கண்டா கனற்கெவனே
யில்லையென்றான் முன்முத்தி யீந்திட்டான்—றொல்லைச்

562. சுருதிமுனி கையெடுத்துச் சொன்னு னெவனே
யிருடியுதை யேற்ரு னெவனே—கருதித்

563. தெரிந்தெழுவர் சத்தியங்கள் செய்தா னெவனே
யிருந்தமய மெல்லா மெவனே—தரும்போ

564. துலகமெல்லாஞ் சால வுறைவா னெவனே
யிலையிலொரு மித்தா னெவனே—நிலைநின்

565. றெவனேதன் னுந்தியிலே யேழுலகு முய்த்தா
னெவனே வணக்கமெலா மேற்பா—னவனேயென் (565)

---

560. அருச்சுனன் கண்ணனைப் பூசித்த மலர் சிவன் சென்னியிற் காட்டிய பாரதக் கதை.

" தீர்த்த னுலகளந்த சேவடிமேற் பூந்தாமம்
சேர்த்தி யவையே சிவன்முடிமேல் தான்கண்டு
பார்த்தன் தெளிந்தொழிந்த பைந்துழா யான்பெருமை
பேர்த்து மொருவராற் பேசக் கிடந்ததே "

நம்மாழ்வார் திருவாய்மொழி.

561. கண்டாகனன் - கண்டாகர்ணன் என்ற சிவகணத்தான். இவன் விஷ்ணுநாமத்தில் வெறுப்புடையனுய் அது கேட்காதிருக்குமாறு காதுகளில் மணி கட்டிக்கொண்டிருந்து பின் சிவனுல் முத்திப்பேறு கிடையாதென அவனுல் அறிந்து விஷ்ணுநாம உச்சாரணம் செய்து பாதகம் பல விளைவித்தும் பின் தானும் தன் தம்பியும் விஷ்ணுவின் திருவருளால் பரமபதம் பெற்ருர்கள் என்பது ஈண்டுக் குறித்த செய்தி.

562. சுருதி முனி - வேதங்களை வகுத்த வியாசன். கையெடுத்துச் சொன்னுன் - 'நதைவம்தே சவாத்பரம்' என்று பிரதிக்ஞை செய்து கூறப்பட்டோன். இருடி யுதை-பிருகுமுனி காலால் உதைத்த செய்தி. (பாகவதம்)

563. எழுமுனிவர் - சப்த ருஷிகள். கோதமர், பாரத்துவாசர், விசுவாமித்திரர், ஜமதக்னி, வசிட்டர், கச்யபர், அத்திரி. 'ஸர்வம் விஷ்ணுமயம்' என்ற சுருதி காண்க.

564 'நாராயண' 'விஷ்ணு' நாமங்களின் அவயவப் பொருள். 'உலகுயிருள் உறைபவன்' என்பதாகும். இலை - ஆலிலை.

565. உந்தி - கொப்பூழ். உய்த்தான் - தோற்றுவித்தான்.

566. பங்கிற் பரம்பொருளாய்ப் பார்ப்பேன் பிறர்ப்பழியே
னெங்கெழிலென் ஞாயி றெனக்கென்று—ளங்கவரும்

567. கள்ளியிவ ளன்றோ கரப்பானைக் கள்ளனைநீர்ப்
பள்ளிதனைப் புள்ளிற் பறப்பானைக்—குள்ளனைவீண்

568. கட்டுணியை வண்டாய்க் கழுவேறி யைநூறு
திட்டுணியைப் பேயுயிரைத் தின்றானைக்—கட்டக்

569. கருநீலனை விரும்பிக் காதலித்து விட்டாள்
பெருநூல் படித்தாள் பிழைத்தா—ளிருநிதியே

570. யென்னு மளவி லெழில்வேங் கடமலையா
னன்னமெழு பொன்முகரி யாற்றினான்—செந்நெல்விளை (570)

571. நல்லதிரு வேங்கடவூர் நாட்டினன் சோணாட்டுத்
தில்லைப் பதிவாழ் திருப்பதியான்—குல்லைத்

---

566. பரம்பொருள் - பெருங் கடவுள். "எங்கெழிலென் ஞாயி றெனக்கு" என்பது உலகப் பழமொழி. திருவாசகம், திருவெம்பாவை. 19-பார்க்க. "எங்கெழிலென் ஞாயி றெளியோ மல்லோம்" திருநா. ஒப்புக் காண்க.

567. கள்ளி - கள்ளத் தன்மையாள். கரப்பான் - ஒளிப்பவன். நீர்ப் பள்ளி - நீரில் பள்ளிகொண்டிருப்பவன். புள் - கருடன். குள்ளன் - குறுமை யானவன்.

568. கட்டுணி - கட்டுண்டவன். வண்டாய்க் கழுவேறி - வண்டின் வடிவு கொண்டு கழுக்களில் தங்கினவன் (பாரதச் செய்தி). நூறு திட்டுணி - சிசுபாலன் வாய்த்திட்டுரைகள் நூறு கொண்டவன். பேயுயிரைத் தின்றானை - பூதனை உயிர் குடித்தவன் (பாகவதம்). கள்ளன், பள்ளி, பறப்பான், குள்ளன், கட்டுணி, திட்டுணி, கழுவேறி, கருநீலன் என்று கூறியவெல்லாம் நிந்தாத் துதி.

570. இக் கண்ணி முதல் தசாங்கம் வருவது காண்க. தசாங்கமாவது பிரபந்தத் தலைவனுடைய நாமம், நாடு, ஊர், ஆறு, மலை, ஊர்தி, படை, முரசு, தார், கொடி இவற்றைக் கூறுவது. வேங்கட மலை, பொன்முகரி என மலை, யாறு இவற்றின் பெயர் வந்தன. பொன் முகரி - சுவர்ணமுகி.

571. கல்வெட்டுகளில் திருவேங்கடக் கோட்டம் குடவூர் நாட்டுத் திருவேங்கடமலை என உள்ளமை காணலாம். சோணாட்டுத் - (சோழன் நாட்டு) தில்லைப் பதிவாழ் திருப்பதி என்றது ஒரு வரலாறு கொண்டு. இரண்டாம் குலோத்துங்க சோழன் தில்லைத் திருச்சித்திர கூடத்தில் எழுந்தருளி யிருந்த கோவிந்தராசன் மூர்த்தம் தில்லை நடராசன் சன்னிதியின் முன்பு கிடந்த திருக்கோலமாக இருந்தமை இடர்ப்பாடாதல் கண்டு அதனைப் பெயர்த்துக் கடலிலிடச் செய்தான். அப்போது இராமாநுச முனிவர் தில்லைக் கோவிந்த ராசரின் மூர்த்தங்களைத் திருப்பதியிற் கொண்டுவரச் செய்து இங்குப் பிரதிட்டை புரிவித்தனர் என்பது. குல்லை - துளசி.

572. திருத்துழாய் மாலையான் சேநந்தி முன்னே
பரித்தருளத் தோன்றும் பரியான்—விரித்தொருகா

573 ளாதிமுத லேயென் றழைத்தமத வாரணத்தான்
கோதிலழ கார்புட் கொடியினன்—வேத

574. முரசினன் செம்பொன் முடியணிந்த சேனை
யரசின னன்னதனை யாள்வான்—சிரசினன்

575. கண்ணின னெஞ்சினன் கந்தனுக்கு வேங்கடத்தி
னண்ணினன் பொற்றேரி னண்ணின—னெண்ணினன் (575)

576. வந்தா னென்றப்போய் வணங்கி யெதிர்கொண்டாள்
கொந்தா யிருகாமுங் கூப்பினள்—சிந்தா

577. மணியே மழையே மலையேயென் வாழ்வே
யணியே யரசே யருளே—தணியாத

578. வேதமே வேத விழுப்பொருளே வேதத்தின்
பாதமே பாகப் பாஞ்சுடரே—நாதமே

579. யண்டமே யண்டத் தடித்திடரே யண்டத்தின்
பிண்டமே பிண்டப் பிறந்தகமே—பண்டைப்

580. பாமே பாரபரமே பவ்வமே யெட்டக்
காமே விதியே கதியே—வாமே (580)

581. பகுதியே மானே பழைய வகங்கார
மிகுதியே தத்துவத்தின் வித்தே—புகுதியே

582. கற்றோர் குணாலயமே கல்லாதா ராலமே
வற்றாம லென்றும் வருநலமே—முற்றமுந்தி

---

572. சேநந்தி - காளை ஆகிய நந்தி. பரித்தருள - தாங்க. பரி - ஊர்தியாகிய கருடன்.

573. மதவாரணம் - மதம் பொருந்திய யானை : கஜேந்திரன். புட் கொடி - கருடக் கொடி.

574. வேதமுரசு - வேத வடிவு ஆகிய பேரிசைக் கருவி.

575. கந்தன் - சுப்பிரமணியன் - தலபுராணம் பார்க்க.

576. கொந்தாய் - கோபமாய் : பூங்கொத்தாக என்றுமாம்.

577. இக் கண்ணி முதல் தோத்திரத் திருநாமங்கள் காண்க.

581. பகுதி - பிரகிருதி. மான் - மஹான். இங்குச் சாங்கிய தத்துவங்களின் பெயர்கள் வந்துள்ளன. புகுதி - இலயம்.

582. குணாலயம் - சற்குணங்கட்குக் கோயில். ஆலம் - விஷம்.

583. ஞாலமே ஞாலத்தி ஞயகமே நண்ணுதா
ராலமே வானோ ரமுதமே—நீலமே

584. யீச னருச்சனையே யிந்திரனு ராதனையே
வாச மலரோன் வழிபாடே—பாசன்

585. செபமே மறலி தியானமே வாயுத்
தபமே குபேரன் சரணே—நவமான

586. பூங்கடலே யான்செய்த புண்ணியமே சேர்ந்தாரைத்
தீங்கடா வொட்டாத தெய்வமே—வேங்கடத்து

587. மாலே யுமக்குநான் மாலான பின்போகக்
காலேறு மோகண் கடக்குமோ—மேலேறு

588. மின்னைப்பொன் ஞக்கியநீர் வேண்டா வெறுப்பாமோ
வென்னைப்பொன் ஞக்கா திருப்பீரோ—பின்னைத்தான்

589. சீசீ யெனவூமைத் தெய்வத்தைக் கேட்டேனே
பேசி ரெனப்பேசும் பெம்மானே—மாசீதை

590. யுற்றகன லோமகனு ரோமப் பெருங்கனலோ
கொற்றவரே காமவனற் கொல்லாதோ—வுற்றவிளங்

591. திங்கள் குளிர்ந்திருந்தாற் செஞ்சடையோன் சேவடியின்
கங்கைச் சுமைசுமக்கக் கல்லானே—யங்கிவற்றத்

592. தென்றல் குளிர்ந்திருந்தாற் சிந்தையுமற் றக்கடலைக்
குன்றிற் குறியோன் குடியானே—யென்றுநீர்

---

583. நண்ணுதார் ஆலமே - பகைவர்க்கு நஞ்சே.

584. ஈசன் - ஈசானன். மலரோன் - பிரமன். பாசன் - வருணன்.

585. மறலி - யமன். சரண் - அடைக்கலம். நவம் - புதுமை.

587. மால் - மயக்கம். காலேறுமோ - நடத்த கூடுமோ ?

589. திருவேங்கட முடையான் "பேசி வரங்கொடுக்கும் பேராளன்" என்பதனை யுட்கொண்டு இங்ஙனம் கூறினள்.

590. சீதை யுற்ற கனல் - சீதாப்பிராட்டியார் புகுந்த தீ. மகனுர் - பிரமன். ஓமப் பெருங்கனல் - யாகாக்கினி. காமவனல் - காதல் தீ.

591. திங்களின் சூடு தாங்காமையாலே சிவன் திருமால் திருவடியிற் பிறந்த கங்கையைப் பிரியாது சுமந்துள்ளானென்று தற்குறிப் பேற்றினமை அறிக.

592. குன்றில் குறியோன் - பொதிய மலையில் வாழும் அகத்திய முனிவன்.

593. வேர்க்கவலை யாதிருந்தால் வேங்கடத்தி லேநின்று
பாற்கடலை யெட்டியெட்டிப் பாரீரோ—சீர்க்குழலின்

594. கீதவெதுப் புப்பொறுத்தர்ற் கீசகத்தை வாயினு
லூதிவிர லிற்பலகா லொத்தீரோ—மாதரார்

595. கொன்கலையைச் சுற்றுங் குருந்திற் பசுங்கவட்டுக்
கென்கலையெ டுக்கா திருந்தீரோ—பொன்கொடிபோ (595)

596. லும்மை மதியா துரத்தேறிக் கொண்டேனே
வெம்மை யிராவணன்மேல் விட்டேனே—சம்மதியாய்த்

597. தாம்படித்துப் பார்த்தேனே தன்வீட்டி லேகொடுபோய்ப்
பாம்படுத்த பாயிற் படுத்தேனே—தேப்படியா

598. னங்கடிமை யென்ப தறிவீரே யம்பலத்தி
லங்கடியில் வையாம லாட்கொள்வீ—ரிங்கெனது

599. கொங்கை வடமலையைக் கூடீர் மயலலர்மேன்
மங்கையிவ ளென்று வரச்சொல்வீர்—துய்கத்

600. திருத்துளவைத் தாரீர் தெருவிலே நின்று
கருத்துளவை மீளவரக் காட்டீர்—தரித்தருளீ (600)

601. ரிவ்வுலகோ ரப்பரே யென்கணவ ரேயென்று
எவ்வுரைகள் கொண்டா ருள்கொண்டார்—செவ்வியுடன்

602. மாலை யளித்தார் மகிழ்ந்தார் விழிகளா
லேல வளைத்தா ரிவர்கள்போல்—வேலை

603. நிலமடவார் விண்மடவார் நீர்மடவார் செம்பொன்
மலைமடவார் நாக மடவார்—குலமடவார்

---

593. வேர்க்க - வியர்வைநீர் உண்டாக.

594. குழலின் கீத வெதுப்பு - புல்லாங்குழலின் இசை வெம்மை. கீசகம் - மூங்கில் : இங்குப் புல்லாங்குழல்.

596. கலை - ஆடைகள். குருந்து - குருந்த மரம். கவடு - கொம்பு. என் கலை - எனது ஆடையையும். பொன் - திருமகள். உரம் - நெஞ்சு.

597. தாம்பு அடித்து - கயிறு கொண்டு அடித்து. பாம்பு அடுத்த பாய் - ஆதிசேடனுயமைந்த படுக்கை.

598. அங்கு - அவ்விடத்துக்கு. அம்பலத்தில் - பொதுவாம் அவையில்.

599. வடமலை - கச்சு அணிந்த முலை. மயம் - காம மயக்கு. துங்கம் - தூய்மை.

600. திருத் துளவு - திருத் துளசி. உளவு - துப்பாள்.

603. மடவார் - இள மகளிர். நாகம் - நாகருலகு.

## பேரிளம்பெண்

604. பேரிளம்பெண் ணீறாகப் பேதைமுத லெல்லாருஞ்
சேர வளைந்திறைஞ்சத் தேரேறி—மாரவேள்

605. வீதிதொறுந் தன்னெதிரே விற்குனிக்கச் சிங்ககிரி
யாதிபதி நாரா யணமலையான்—சோதி (605)

606. இடபமலை யஞ்சனவெற் பென்றமலை யாளன்
வடமலையான் புட்கோ மலையான்—புடவி

607. சிறந்தமலை நின்றபிரான் சீர்வேங் கடத்தி
லுறைந்தபிரான் போந்தா னுலா.

### வெண்பா.

" ஏழ்புவ னத்தோரு மேழுபரு வத்தோரு
மேழுசயி லத்தோரு மேத்தவே—வாழு
மலைகுனிய நின்றபிரான் வானவர்தம் மப்ப
னுலகறியப் போந்தா னுலா ".

---

605. பேதைமுதல் பேரிளம்பெண் ஈறு ஆக என மாறுக. இறைஞ்ச - வணங்க.

606. இடபம் - ரிஷபம். வெற்பு - மலை. புட்கோ - பறவை அரசு ஆகிய கருடன். புடவி - உலகு.

607. உலா இறுதிக் கண்ணிகளில் ஏழு மலைகளின் திருப்பெயர்களைக் கூறி முடித்தது காண்க.



# பிழையும் திருத்தமும்.

| பக்கம். | வரி. | பிழை. | திருத்தம் |
|---|---|---|---|
| 3 | 23 | நாமத்தை | நாமத்தை நாம் |
| 10 | 6 | யடுமுல | யடுமூல |
| 18 | 2 | திருமலையும் | திருமதிலும் |
| 28 | 10 | சோரவே | சேரவே |
| ,, | 23 | 340 | 177 |
| 29 | 26 | 354-ம் வரி | 177-ம் கண்ணி |
| 30 | 11 | யாருதனத்தோ | யாருன கொத்தோ |
| ,, | 31 | (சேர்க்க) பி - ம். | யாருதனத்தோர் |
| 36 | 15 | கொண்ட சாங் | கொண்டசாங் |
| 40 | 26 | அளவின்றி | ஒலியின்றி |
| 46 | 8 | போலி மிரத | போலிரத |
| 47 | 4 | யற்பு தனப்ப | யற்புத னப்ப |
| 80 | 20 | குப்போற் | குப்போற் |